



# அம்பிகை

# அழகின் அலைகள்

செல்வி பதிப்பகம்

வள்ளி









உ

ஆதிசங்கரர் அருளிச் செய்த
ஸௌந்தர்ய லஹரியின் தமிழ் ஆக்கம்
பொருள் விளக்கத்துடன்

# அம்பிகை அழகின் அலைகள்

தமிழாக்கம்
**பண்டித மு. முத்து வேங்கடாசலம்**

செல்வி பதிப்பகம்
காரைக்குடி - 623 001

செல்வி—78
முதற்பதிப்பு—டிசம்பர் 1986


| | |
|---|---|
| Title : | AMBIGAI AZHAHIN ALAIHAL<br>Tamil Translation of<br>Soundarya Lahari (Sanskrit)<br>by Aadhi Sankarar with annotations |
| Translation : | Pandit M. Muthuvenkatachalam |
| Language : | Tamil |
| Subject : | Worship of Ambigai |
| Book Size : | Crown 8vo |
| Pages : | 112+8 |
| Edition : | First Edition December 1986 |
| Publisher : | Selvi Pathippaham<br>Karaikudi - 623 001 |
| Classification : | O, 25 ••x1, 1 : g<br>31 M 6 |
| Price : | Rs. 9-00 |

3-3

# பதிப்புரை

---

ஆதிசங்கரர் அருளிச் செய்த சௌந்தர்ய லஹரியின் வடமொழி மூலம், அதன் தமிழ் உச்சரிப்பு முறை, தமிழில் செஞ்சொற் பாமாலை, கருத்துரை ஆகிய சிறப்புக்களுடன் வெளியிடப் பெறுகிறது.

---

இந் நூலை யாவரும் பொருளறிந்து படித்துப் பாராயணம் செய்து பயன்பெறவேண்டும் என்ற கருத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

---

இந்நூலில் உள்ள தமிழ்ப்பாடல்களுக்கு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள் அருளாசி வழங்கி தேவியின் அருள் பெற ஆசீர்வதித்திருக்கிறார்கள். அவர்கள் பொன்னார் திருவடிகளில் ''அம்பிகை அழகின் அலைகள்'' எனும் இந்நூலை சமர்ப்பித்து வணங்குகிறோம்.

---

இந்நூலைக் 'கட்டளைக் கலித்துறை' யாப்பில் மன முருகிப் படிப்பார்க்கு இசைந்த இனிய தமிழ்ப் பாமாலையாக யாத்துத் தந்துள்ள பண்டித திரு. மு. முத்து வேங்கடாசலம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரியதாகும்.

---

'அம்பிகை அழகின் அலைகள்' பாமாலையை காதலாகிக் கசிந்து நாள்தோறும் பாராயணம் செய்து படிப்போர் அனைவரும் அருளும் பொருளும் பெற்றுப் பேரின்பம் அடைவோமாக.

---

காரைக்குடி
1—12—86

வீர. சிவராமன்
செல்வி பதிப்பகம்

# ஆதி சங்கரர் மகிமை

□

உலக முழுதீன்ற அன்னை பார்வதி; தந்தை பரமசிவன்; உலக முழுதுக்கும் குரு ஆதிசங்கரர். இவர் 'காலடி' என்ற ஊரில் 'சிவகுரு', 'ஆர்யாம்பாள்' என்ற சான்றோர்க்குப் புதல்வராக அவதரித்தார்கள்.

தம் எட்டாம் வயதில் நதிக்கு நீராடச்சென்ற தம் காலை முதலை கவ்வ அன்னையிடம் வேண்டி மற்றோ ரெட்டாண்டுகள் பெற்றுத் துறவுநிலை மேற்கொண்டார்.

ஓர் ஏழைப்பெண்ணின் வறுமை போக்குவான் வேண்டிக் 'கனகதாரா ஸ்தோத்திரம்' பாடிப் பொன் மழை பொழியச் செய்தார்.

ஆதி சங்கரர் கருணைத் திருவுரு; அஞ் ஞானத்தால் பிறவிப் பெருங்கடலாழ்ந்து தவிக்கும் மக்களைக் கரையேற்றத், தக்ஷிணாமூர்த்தியாய் மௌனமாய் இருந்த நிலையை விட்டு — ஆலின் அடியில் நிலைத்திருந்ததையும் நீக்கி இப் பேருலகில் யாண்டும் சென்று பிரம்ம தத்துவத்தை உபதேசிக்கத் தொடங்கினார்.

கீதா பாஷ்யம், 108 உபநிடத பாஷ்யம், சூத்ர பாஷ்யம் இவற்றின் மூலம் அத்வைத தத்துவத்தைத் தாபித்தார்; இவற்றைப் பற்றிப் பேருரையாற்றினார்.

3-3

மானச சரஸில் வளர்ந்த தாமரைத் தேனை வண்டுகள் அருந்தி இன்புறுதல் போல் ஆசாரியரின் விரிவுரைத் தேனை யுண்டு சீடர்கள் நாற்றிசையிலும் இன்புற்று வாழ்ந்தனர்.

ஸனத்ஸுஜா தீயத்துக்கும், ஹஸ்தாமலகீயத்துக்கும், விஷ்ணு ஸஹஸ்ர நாமத்துக்கும் விரிவுரை வரைந்து அத்வைதத்தைப் புகட்டினார்.

மந்தாதிகாரிகளுக்கும் ஒரு சுலோகம் முதல் ஆயிரம் சுலோகம் ஈறாக, ஏக சுலோகி, பஞ்சகம், ஷட்கம், அஷ்டகம், தசகம், சத சுலோகி, உபதேச ஸாஹஸ்ரீ என்று எண்ணற்ற அத்வைதப்ரகரணக்கிரந்தங்களை இயற்றினார்.

நாடகக் காப்பியப்பற்றுடையவரைத் திருப்புவதற்கு வேதாந்த விஷயமாய்ப் பிரபோத சந்திரோதயம், ஸங்கல்ப சூர்யோதயம் முதலிய நாடகங்களைக் கவிஞர்கள் செய்தது போன்று, தோத்திரமூலம் அத்து வைதத்தைப் புகட்டக் கருதிப்பல துதிகளை 'ஹரிமீடே', பாதாதி கேசாந்தத்துதி, கேசாதி பாதாந்தத்துதி, சிவானந்தலஹரி, சௌந்தரியலஹரி முதலிய எண்ணற்ற துதிநூல்களை இயற்றியருளினார்.

ஸ்ரீமத் ஆசார்யாள் தாம் எடுத்த வேடத்திற் கேற்பக் கைலை சென்றார்; ஐந்துபடிக லிங்கங்களை வாங்கி வந்தார்; அவற்றுள் ஒன்று ஸ்ரீ காஞ்சிமடம் ஸ்ரீபெரிய வர்கள் ஆராதித்து வரும் ஸ்ரீ சந்திரமௌளீசுவரர்.

கைலையில் ஈசுவரன் உள்ள இடத்தில் அம்பாள் மந்திர சாஸ்திரம் இருந்தது, அதை எடுத்துக் கொண்டு வரும் போது நந்திகேசுரர் அதைப்பறித்துக் கொண்டார். அவரிடமிருந்து உருவிக்கொண்டு ஒருபாகத்தை ஆசார் யாள் கொண்டுவந்தார். அதில் 41 சுலோகங்கள் இருந்

தன; இங்கு வந்து மேலே 59 சுலோகங்களை இயற்றி அதைப் பூர்த்தி செய்தார். அந்நூலே சௌந்தரியலஹரி. 100 சுலோகங்களும் கைலையிலிருந்து வந்திருந்தால் நமக்கு நஷ்டம்தான். அப்போது ஸ்ரீ ஆசார்யாளின் வாக்கு மகிமையை நாம் அனுபவிக்க முடியாது. பின் உள்ள 59 சுலோகங்கள் ஆனந்த மூட்டும் தோத்திரங்கள்; முன் உள்ளவை மந்திரங்கள்.

நான்கு திசைகளில் நான்கு மடங்களைத் தாபித்து நான்கு சீடர்களை மடாதிபதிகள் ஆக்கிய ஸ்ரீபகவத் பாதர்கள், சுரேச்வரர் ஹஸ்தாமலகர், பத்மபாதர், தோடகர் என்ற நான்கு சீடர்களுடன் சாந்தி ததும்ப விளங்குவதைப் பிரதிமையிலும் படத்திலும் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றோம்.

பின் 'ஆதிசங்கரர் காஞ்சியில் காமகோடிபீடம் தாபித்து அதில் தாம் அமர்ந்து கொண்டு அங்கேயே லயமானார்' என்பது வெள்ளிடைமலை.

இவர்க்கு, 16வயது முடியும் தறுவாயில் வியாசமுனிவர் அருள்பெற்று மீண்டும் 16வயது பெற்றார் என்பது வரலாறு.

இவர் காலம் கி.மு. 509 என்பர்.

பண்டித த.மு. முத்துவேங்கடாசலம்

# முன்னுரை

'ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ' என்னும் இந்தத் துதி நூல் ஆதிசங்கரரால் இயற்றப்பட்டது. 1 முதல் 41 சுலோகம் வரை 'ஆனந்தலஹரீ' என்றும், 42 முதல் 100 வரை உள்ள சுலோகங்கள் 'ஸௌந்தர்யலஹரி' என்றும் கூறப்பட்டு வருகிறது. 'லஹரி' என்ற சொல்லுக்கு 'அலை' என்பது பொருள். இவ்விரு பகுதிகளையும் முறையே 'ஆனந்த அலை' என்றும் 'அழகின் அலை' என்றும் தமிழில் மொழி பெயர்க்கலாம்.

முதற்பகுதியில் மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை உள்ள சக்ரங்களில் வீற்றிருக்கும் தேவியை உபாசிக்கும் முறைகளும், தேவி ஸ்ரீசக்ர வர்ணனையும் 'பஞ்சதசீ' என்னும் மஹாமந்திரமும் உணர்ந்து உபாஸனை செய்பவர்க்குப் பரமானந்தம் அலை போல் தொடர்ந்து வருவதால் 'ஆனந்த லஹரி' என்ற பெயரும், இரண்டாம் பகுதியில் தேவியின் கேசம் முதல் திருவடி வரை உள்ள திருமேனியழகைப் பத்திச் சுவை நனி சொட்டச்சொட்ட வருணிப்பதால் 'ஸௌந்தர்ய லஹரி' என்ற பெயரும் மிகமிகப் பொருந்தும்.

இத்துதி நூலின் பேரழகைத் தமிழ் நிலமும் சுவைத்துப் பரமானந்தம் பெறவேண்டும் என்ற வேட்கையால் 'கட்டளைக் கலித்துறை' யாப்பில் பாடலும், கருத்துரையுமாக இந்நூல் வெளியிடப் பெறுகின்றது.

இத்துதிப் பாடல்களை எப்பலனையும் எதிர்நோக்காமல் தேவியின் ப்ரீதிக்காகவே பாராயணம் செய்யலாம்.

அவரவர் விரும்பும் பலனுக்காக ஸங்கல்பம் செய்து கொண்டு இந்நூல் முழுதையும் பாராயணம் செய்யலாம்.

அல்லது ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பாடலை—எந்தப் பலனை எதிர்பார்க்கிறோமோ அதற்குரிய பாடலை ஒரு நாளில் ஆயிரத்தெட்டு முறை படனம் செய்தால் பலன் நிச்சயமாய் சித்திக்கும். இப்பாடலை இன்னபலனுக்கு ஜபம் செய்ய வேண்டும் என்ற குறிப்பு பின்னே சேர்க்கப்பட்டுள்ளது.

இத்துதி நூல் ஒரு கற்பகதரு. ரோக நிவிருத்தியிலோ, துர்தேவதைகளை விரட்டுதலிலோ, பகைவரை வெல்வதிலோ சிறந்த கலைஞானம் அடைவதிலோ அபம்ருத்யுவை விரட்டு வதிலோ, சகலவித மங்களங்களைப் பெறுவதிலோ இந் நூலுக்குச் சமமான சிந்தாமணி வேறு இல்லை.

1977 ஆம் ஆண்டில் இந்நூற் பாடல்களை மட்டும் வெளியிட்ட போது ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடாதிபதிகளாம் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளிய ஸ்ரீ முகமும் சேர்த்து வெளியிட்டேன். இப்பதிப் பிலும் அதனை இணைத்துள்ளேன்; ஸ்ரீ குருநாதர் திருவடி களை மனமாரப் போற்றி வணங்குகின்றேன்.

இச்சீரிய நூல் பொருள் விளக்கத்துடன் தற்போது செல்வி பதிப்பக வெளியீடாக வெளிவருகிறது.

உரிமையாளர் திரு வீர. சிவராமன் அவர்கட்கு என் நன்றி உரித்தாகுக.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் பாத பத்மங்களில் பரம பக்தியுடன் பராம்பிகையின் பரதத்துவத்தைப் போதிக்கும் இத்துதி நூலைப் பாராயணம் செய்து குருவருளும் ஸ்ரீ பராசக்தி அருளும் பெறுவார்களாக.

இங்ஙனம்

பண்டித. மு. முத்துவேங்கடாசலம்

உ

ஸ்ரீ

# ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய ஸ்ரீமுகம்

எல்லா உலகங்களையும் ஸ்ருஷ்டித்துக் காப்பாற்றிக் கொண்டு வரும் பராசக்தியின் உபாஸனம் அவசியமானது என்பதை உணர்ந்த ஸ்ரீ பகவத்பாதாசார்யாளால் கைலாஸத்திலிருந்து கொண்டு வரப்பட்டு, தன்னால் பூர்த்தி செய்யப்பட்டுள்ளதும், மந்த்ர சாஸ்திர நுணுக்கங்கள் அமைந்திருப்பதும் ஆன ஸௌந்தர்யலஹரி ஸ்தோத்ரத்தைத் தமிழில் பொருளறிந்து பாராயணம் செய்பவர்களுக்கு உபகாரமாக பள்ளத்தூர் வித்வான் ஸ்ரீ முத்துவேங்கடாசலமய்யர் செய்யுள் நடையில் கட்டளைக் கலித்துறை யாப்பில் செய்துள்ள மொழி பெயர்ப்பு பொருட்செறிவுடன் விஷயங்களை நன்கு விவரிக்கிறது.

பக்தர்கள் இந்நூலின் துணையுடன் பராசக்தியை ஆராதித்துக்கொண்டு அருளைப் பெற்று எல்லா வாழ்க்கை நலன்களையும் அடைவார்களாக.

இவ்வாசிரியரும் மேன்மேலும் இத்தகைய தெய்விக நூல்களை இயற்றிக் கொண்டு இஹபர மேன்மைகளை தேவியின் அருளால் அடைவாராக.

யாத்ரா ஸ்தானம்
திருப்புத்தூர்
இராமநாதபுரம் ஜில்லா
15—3—1977

நாராயண ஸ்ம்ருதி;

ஸ்ரீ



விந்துமுக் கோணம் வியத்தகுசீர் எண்கோணம்
உந்தும்ஒரு பான்கோணம் உள்,வெளியில்

—முந்து,பதி

னாற்கோணம் மூவட்டம் நல்லிதழ்எட்(டு) ஈரெட்டு
மேற் சதுர மூன்று,பரை வீடு.

பிந்து, முக்கோணம், எட்டுக்கோணம், உள் பத்துக் கோணம், வெளிப்பத்துக்கோணம் பதினான்கு கோணம், எட்டுதளம், பதினாறுதளம், மூன்றுவட்டம், மூன்று கோட்டு பூபுரம் இவற்றாலாகிய இது பரதேவதையின் ஸ்ரீ சக்ரம் எனப்படும்.

# அம்பிகை அழகின் அலைகள்
# ஸௌந்தர்ய லஹரீ
## முதல்பாகம் — ஆனந்தலஹரீ

### காப்பு

**அன்னை முடிப்பிறை தன் கோட்டில் இற்ற அரைப்பகுதி**
**என்றே எணிப்புழைக் கையினுல் பற்றி இணைத்தருளி**
**மன்னுங் கணபதி, சத்தி யழகு மனம் புகுந்து**
**நன்னயச் செந்தமிழ்ப் பாவாய் வர வரம் நல்குகவே.**

பொருள் : தன் தாயின் முடியை அலங்கரிக்கும் பிறை, தன் கொம்பில் ஒடிந்த அரைப்பாகம் என்று எண்ணி அப் பிறையைத் துதிக்கையால் எடுத்துத் தன் கொம்புடன் சேர்த்துப் பார்க்கும் விநாயகப் பெருமான், சத்தியின் பேரழகு மனத்துள் புகுந்து செந்தமிழ்ப் பாவாய் மலர வரந் தருவாராக.

### குரு வணக்கம்

**உற்ற வட தரு நீங்கி நடந்திட்டு மோனமொழித்(து)**
**அற்புடன் சத்தி அழகலை மூழ்கி அகமுருகிச்**
**சொற்சுவைக் காப்பியம் கண்ட மெய்ஞ்ஞானம் துலங்குமணி**
**நற்சங் கரபக வற்பாதர் தாள்மலர் நந்தலைக்கே.**

பொருள்: தட்சிணுமூர்த்தியாய்க் கல்லாலின் கீழிருந்து முனிவர் நால்வர்க்குக் குருவாய்ச் சின்முத்திரை தாங்கி மோனமாக உபதேசித்தவர், அங்கிருந்து நீங்கி எங்கும் நடந்து மோனம் விடுத்து சக்தியின் ஸௌந்தர்ய வெள்ளத் தில் மூழ்கி மனமுருகி 'ஸௌந்தர்ய லஹரி' பாடியருளிய ஸ்ரீ சங்கர பகவத்பாதராம் அந்த ஞான குருவின் திருவடி நிலைகள் நம் தலைக்கு அணி செய்யும்.

1

நூல்

# சக்தியை அன்றிச் சிவத்துக்குச் செயல் இல்லை

शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितु-मपि ।
अतस्त्वा-माराध्यां हरि-हर-विरिञ्चादिभि-रपि
प्रणन्तुं स्तोतुं वा कथ-मकृतपुण्यः प्रभवति ॥१॥

*சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
ந சேதேவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திது-மபி।
அதஸ்-த்வா-மாராத்த்யாம் ஹரி-ஹர-விரிஞ்சாதிபி-ரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கத-மக்ருத-புண்ய:
ப்ரபவதி ॥*

**சிவமாம் பொருளுடன் சத்தியும் சேரில் செயல்வலிதே;
இவள்தான் பிரியில் இயங்கற்கரிதென்(று) இருக்கியம்பும்;
நவமாம் புவனத்து மூவர் பரவிடு நாயகி தான்
அவனியில் செய்தவம் இல்லார் பணிதல் அரியதொன்றே.**

*பொருள் : படைக்கும் திறமை கூட்டும் அம்மையுடன் சேர்ந்தால் தான் ஈசனுக்கு அத்திறமை கிட்டும்; இல்லையேல் அவ்வீசனல் அசையக் கூட முடியாது என்று வேத மந்திரம் விரித்துரைக்கும்; எனவே அயன், அரன், அரி ஆகிய முத்தேவரும் கூடத்தொழும் உன்னைச் சிறிதும் புண்ணியம் செய்தறியாத என்னைப் போன்றவன் வணங்கவோ துதிக்கவோ எங்ஙனம் இயலும்.*

**நிவேதனம் :** *நெய் சேர்த்த அன்னமும் வடையும்.*

# தேவி பாத தூளியே முத்தொழிற்கும் காரணம்

तनीयांसं पांसुं तव चरण-पङ्केरुह-भवं
विरिञ्चिः संचिन्वन् विरचयति लोका-नविकलम् ।
वहत्येनं शौरिः कथमपि सहस्रेण शिरसां
हरः संक्षुद्यैनं भजति भसितोद्धूलन-विधिम् ॥२॥

தநீயாம்ஸம் பாம்ஸூம் தவ சரண-பங்கேருஹ-பவம்
விரிஞ்சி: ஸஞ்சிந்வந் விரசயதி லோகா-நவிகலம்।
வஹத்யேநம் சௌரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்
ஹர: ஸம்க்ஷுத்யைநம் பஜதி பஸிதோத்தூளந-விதிம்॥

பஞ்சார் அடித்தா மரைநுண் துகள் சேர்த்துப் பாரடங்க
அஞ்சம் உயர்த்தோன் படைப்பன்; அரவாம் அரியுமதை
விஞ்சும் தலை ஆயிரத்தால் தரிப்பன்; விடையவனும்
வஞ்சி! பொடி செய்து நீறணிவான்; நின் மகிமையிதே.

பொருள்: பிரமன், உன் பாத தூளியின் மிகச்சிறிய அணுவைக் கொண்டு உலகைப் படைக்கிறான்: ஆதிசேடனும் திருமாலும் அவ்வுலகை (பாத தூளியை) தம் தலைகளால் தாங்கி நிற்கிறான்: விடையில் ஏறும் பரமசிவனும் உன்பாத தூளியையே தனக்கு மேற்பூச்சாக(விபூதியாக)கொள்கிறான். நின்மகிமை இதுவாம்.

நிவேதனம்: பால் பாயஸம்

3

# ஐச்வர்ய ஸித்தி

अविद्याना-मन्त-स्तिमिर-मिहिर-द्वीपनगरी
जडानां चैतन्य-स्तबक-मकरन्द-स्रुतिझरी ।
दरिद्राणां चिन्तामणिगुणनिका जन्मजलधौ
निमग्नानां दंष्ट्रा मुररिपु-वराहस्य भवति ॥३॥

அவித்யா நா-மந்தஸ்திமிர-மிஹிர-த்வீப-நகரீ
ஜடா நாம் சைதந்ய-ஸ்தபக-மகரந்த ஸ்ருதிஜரீ ।
தரித்ராணும் சிந்தாமணி-குண நிகா ஜந்மஜலதௌ
நிமக்நா நாம் தம்ஷ்ட்ரா முரரிபு-வராஹஸ்ய பவதி ॥

உள்ளிருள் ஓட்டும் கதிர்சூழ் அருக்கன் உதய நகர்;
எள்ளும் சடர்க்கது சைதன்யக் கொத்தின் இழி நறவே;
உள்ளும் வறிஞர்க்குச் சிந்தாமணியின் ஒளித்திரளே;
அளற் பவக்கடற் கேழல் மருப்பாம் அடித்துகளே.

பொருள் : தாயே! இந்த உன் பாத தூளி, அஞ்ஞான மாகிய இருளையகற்றும் கதிரவன் தோன்றும் தீவு: மூடர் களுக்கு ஞானம் என்னும் தேன் பெருக்கு; ஏழைகளுக்குச் சிந்தாமணி; பிறவிக் கடலில் மூழ்கியவர்கட்கு வராகப்பெரு மானின் (பூமியைத் தாங்கிய) கோரப்பல்.

நிவேதனம் : உளுந்து வடை

4

# போகம் முத்தி பொழியும் பொன்னடி

त्वदन्यः पाणिभ्या-मभयवरदो दैवतगणः
त्वमेका नैवासि प्रकटित-वराभीत्यभिनया ।
भयात् त्रातुं दातुं फलमपि च वाञ्छासमधिकं
शरण्ये लोकानां तव हि चरणावेव निपुणौ ॥४॥

த்வதந்ய: பாணிப்யா-மபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடித-வராபீத்யபிநயா |
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்ச்சா-ஸமதிகம்
சரண்யே லோகானும் தவ ஹி சரணுவேவ நிபுணௌ ||

மன்னிய மூவர் கரத்தால் அபயம் வரந்தருவர்;
அன்னே! நீ கையால் அளித்திலை; ஈதோர் அதிசயம் நின்
பொன்னுர் திருவடியே முத்தி போகம் புகழ் அளிக்கும்
மின்னுயிரம் ஒரு மெய் வடிவாகி மிளிர் கொடியே!

பொருள் : தாயே! உன்னைத் தவிர, மற்றைய தேவர்களெல்லாம் அபயம், வரதம் என்ற ஹஸ்த முத்திரைகளைக் காட்டுகின்றனர்: நீ ஒருத்தி தான் அவ்வபிநயங்களைச் செய்வதில்லை; ஏனெனில் உன் திருவடிகளே பயத்தினின்றும் காத்து விரும்பியதற்கு அதிகமாகப் போகமும் புகழும், முத்தியும் அளித்து விடுகின்றன.

நிவேதனம் : எலுமிச்சம்பழச் சாதம்

5

# சக்தி பூஜை மகிமை

हरिस्त्वामाराध्य प्रणत-जन-सौभाग्य-जननीं
पुरा नारी भूत्वा पुररिपुमपि क्षोभ-मनयत् ।
स्मरोऽपि त्वां नत्वा रतिनयन-लेह्येन वपुषा
मुनीनामप्यन्तः प्रभवति हि मोहाय महताम् ॥५॥

ஹரிஸ்-த்வா-மாராத்ய ப்ரணத-ஜந-ஸௌபாக்ய-ஜநநீம்
புரா நாரீ பூத்வா புரரிபுமபி க்ஷோப-மநயத்।
ஸ்மரோऽபி த்வாம் நத்வா ரதி-நயந-லேஹ்யேந வபுஷா
முநீநா-மப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம்॥

மண்ணில் வணங்கச் சுபந்தரு நின்னை அம் மாலவனர்
எண்ணி வழிபட மோகனப் பெண்ணாகி ஈசன் உளத்(து)
எண்ணில் மயல் விளைத்தார்; மாரன் வந்தித் தெழில் உருப்பெற்(று)
உண்மை முனிவர் உளத்தில் பெரு மோக மூட்டுவனே.

பொருள்: நீ வணங்கியவர்க்குச் செல்வமெல்லாம் அளிப்பவள்: திருமால் உன்னைப் பூசித்துத் தான் பெண்ணுருவங்கொண்டு பரமசிவனையும் மோகமடையச் செய்தார்; அதுபோன்று மன்மதனும் உன்னை வணங்கித்தான் மிக்க அழகு பெற்று முனிவர் மனத்தையும் கலங்கச் செய்கிறான்.

**நிவேதனம்:** வெண் பொங்கல்

## 6

# கடைக் கண்ணின் கருணை

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखाः
वसन्तः सामन्तो मलयमरु-दायोधन-रथः ।
तथाप्येकः सर्वं हिमगिरिसुते कामपि कृपां
अपांगात्ते लब्ध्वा जगदिद-मनङ्गो विजयते ॥६॥

தநு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்ச விசிகா:
வஸந்த: ஸாமந்தோ மலயமரு-தாயோதந-ரத:।
ததாப்யேக: ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதித-மநங்கோ விஜயதே ॥

**காமன் தனுமலர், நாண் தும்பி அம்பைந்து காமர்மலர்**
**சேம அமைச்சன் வசந்தன் இரதம் திரி வளியே**
**நாமம் அனங்கன் நின் கட் கடை நோக்கில் நணைந்தமையால்**
**பூமி அடங்கலும் வெற்றி கொண் டன்னே! பொலிகுவனே.**

பொருள் : மன்மதனுக்கு மலர் வில்; வண்டுகள் நாண் கயிறு; ஐந்து பாணங்களும் தாமரை முதலான ஐந்து மலர்கள்; வசந்தருது அமைச்சன்:போருக்குரிய இரதம் தென்றல் காற்று; இவைகள் வலிவற்றவை. ஆயினும் மன்மதன் நின் கடைக்கண் பார்வையால் வலிமை பெற்றுத் தனித்து நின்று இவ்வுலகனைத்தையும் வெற்றி கொள்கின்றான்.

**நிவேதனம் :** கரும்பு

7

# சக்தி ரூப வர்ணனை

**क्वणत्कांची-दामा करिकलभ-कुम्भ-स्तन-नता**
**परिक्षीणा मध्ये परिणत-शरच्चन्द्र-वदना ।**
**धनु-र्बाणान् पाशं सृणिमपि दधाना करतलैः**
**पुरस्ता-दास्तां नः पुरमथितु-राहो-पुरुषिका ॥७॥**

க்வணத் காஞ்சீ-தாமா கரிகலப-கும்ப-ஸ்தந-நதா
பரிக்ஷீணா மத்யே பரிணத-சரச்சந்த்ர-வதநா ।
தநுர்-பாணாந் பாசம் ஸ்ருணி-மபி ததாநா கரதலை:
புரஸ்தா-தாஸ்தாம் ந: புரமதிது-ராஹோ-புருஷிகா ॥

**மேகலையாள் கரிக் கும்பம் நிகர்க்கும் மிளிர் நகிலாள்**
**யூகத் துணர் சிற்றிடையாள் நிறைமதி ஒண் முகத்தாள்**
**ஆகுங் கழைவில் மலர்க்கணை பாசமொ டங்குசஞ்சேர்**
**வாகைக் கரத்தாள் திரிபுரை! என்முனர் வந்தருளே!**

பொருள் : அம்பிகை சிறுமணிகள் ஒலிக்கும் மேகலை யணிந்தவள்; யானை மத்தகம் போன்ற பெருத் தனங்களால் சற்று வணங்கினவள்; வில், பாணம், பாசம், அங்குசம் இவற்றைக் கையில் தரித்தவள்; இத்தகைய அகங்கார (சிவசக்தி) ஸ்வரூபிணியான பரதேவதை எங்கள் முன்னே காட்சி தருவாளாக!

குறிப்பு :– மணிபூரகத்திலிருந்து இருதய கமல நடுவில் ப்ரத்யகாத்மாவுக்கு எதிரில் பிரகாசிக்கட்டும்!

**நிவேதனம் :** அன்னமும் பாயசமும்

8

# தேவியின் வாசஸ்தானம்

सुधासिन्धोर्मध्ये सुरविटपि-वाटी-परिवृते
मणिद्वीपे नीपोपवनवति चिन्तामणि-गृहे ।
शिवाकारे मञ्चे परमशिव-पर्यङ्कनिलयां
भजन्ति त्वां धन्याः कतिचन चिदानन्द-लहरीम् ॥८॥

ஸுதா-ஸிந்தோர்-மத்யே ஸுரவிடபி.வாடீ-பரிவ்ருதே
மணித்வீபே நீபோபவநவதி சிந்தாமணி க்ருஹே।
சிவாகாரே மஞ்சே பரமசிவ-பர்யங்க-நிலயாம்
பஜந்தி த்வாம் தந்யா: கதிசந சிதாநந்த-லஹரீம்॥

**சேரமு தக்கடற் கற்ப தருமணித் தீவில்வடி**
**வாருங் கதம்ப வனநிறை சிந்தா மணிமனையில்**
**ஆருஞ் சிவமெனு மஞ்சம் பரசிவன்அங்க மொளிர்**
**சீரார் சிதானந்த வெள்ளம்! நினைச்சிலர் சிந்திப்பரே.**

பொருள் : அமுதக் கடலின் நடுவில், கற்பகத் தருக்களால் சூழப்பெற்ற இரத்தினமயமான தீவில், கதம்பமரங்கள் நிறைந்ததும், சிந்தாமணிகளால் அமைந்ததுமான அரண்மனையில் திரிகோண வடிவான சிவமஞ்சத்தில் (கட்டில்) சதாசிவ தத்துவமாகிய படுக்கையில் அமர்ந்தவளும், ஞான ஆனந்தஅலை வடிவினளுமான உன்னை ஒரு சில புண்யசாலிகளே தியானம் புரிகின்றார்கள்.

**நிவேதனம்:** மிளகுச் சாதமும், பாயஸமும்

9

# தேவி சஞ்சரிக்கும் இடம்

महीं मूलाधारे कमपि मणिपूरे हुतवहं
स्थितं स्वाधिष्ठाने हृदि मरुत-माकाश-मुपरि ।
मनोऽपि भ्रूमध्ये सकलमपि भित्वा कुलपथं
सहस्रारे पद्मे सह रहसि पत्या विहरसे ॥९॥

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்த்திதம் ஸ்வாதிஷ்ட்டாநே ஹ்ருதி மருத-மாகாச-முபரி।
மநோ஽பி ப்ருமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ||

**மூலம் மணிபூ ரகம் லிங்கம் மார்பு முதுகளமே**
**நீலப் புருவநடு, புவி நீர் அனல் கால் வெளியே**
**ஆலு மனமாஞ் சுழுனை வழிபிளந் தாயிரந் தோ(டு)**
**ஏலுங் கமலத்தில் அன்பரொ டானந்தம் எய்துவையே.**

*பொருள் : மூலாதாரத்திருக்கும் புவி (பூமி) தத்துவத்தையும், மணிபூரகத்தில் உள்ள ஜல தத்துவத்தையும், சுவாதிட்டானத்தில் (லிங்கம்) உள்ள அக்னி தத்துவத்தையும் இருதயாகாசத்தில் (மார்பு) அமைந்த அநாஹத சக்கரத்தில் உள்ள வாயு (கால்) தத்துவத்தையும், விசுத்தி சக்கரத்தில் (கழுத்து) உள்ள ஆகாச தத்துவத்தையும், புருவங்களினிடையே ஆக்ஞா சக்கரத்திலுள்ள மனஸ் தத்துவத்தையும் பிளந்து கொண்டு போய் மேலே ஆயிரம் தளமுள்ள 'ஸஹஸ்ராரம்' என்ற தாமரை மலரில் நீ உன் கணவருடன் (சதாசிவத்துடன்) களிப்புற்றிருக்கின்றாய்.*

**நிவேதனம் :** *பால் பாயஸம்*

# 10

## ஆதார சக்ரவாஸினி

सुधाधारासारैश्चरणयुगलान्त-र्विगलितैः
प्रपञ्चं सिञ्चन्ती पुनरपि रसाम्नाय-महसः ।
अवाप्य स्वां भूमिं भुजगनिभ-मध्युष्ट-वलयं
स्वमात्मानं कृत्वा स्वपिषि कुलकुण्डे कुहरिणी ॥१०॥

ஸுதாதாராஸாரைச்-சரணயுகலாந்தர்-விகலிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புநரபி ரஸாம்நாய மஹஸ:।
அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிப-மத்த்யுஷ்ட-வலயம்
ஸ்வமாத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே
குஹரிணீ ||

**தாளிணை தம்மிற் பெருகும் அமுதம் தனுமுழுக**
**மீளப் பதங்கள் கடந்துபின் மூலம் விரைந்தடைந்து**
**வாளரவென்ன வளைந்து மரைநூல் வடிவமுடன்**
**நாளும் அறிதுயில் செய்குவை சச்சிதானந்த மின்னே!**

பொருள் ; தாயே! உன் திருவடிகளிலிருந்து பெருகும் அமிர்தப் பிரவாஹத்தால் உடலிலுள்ள எழுபத்திரண்டாயிரம் நாடிகளை நனைக்கிறாய்; பின்னர்ச் சந்திரமண்டலத்திலிருந்து உன் இருப்பிடமான மூலாதார சக்கரத்தை அடைந்து தன் உருவத்தைச் சர்ப்பம் போல் வட்டமாக அமைத்துக்கொண்டு சிறிய துவாரமுள்ளதும், தாமரைத் தண்டுக்குள் இருக்கும் நூல் போன்றதுமான நுண்ணுடலுடன் மூலாதார சக்கரத்தில் யோக நித்திரை புரிகின்றாய்.

**நிவேதனம்:** பழம்

## 11

# ஸ்ரீ சக்ர வருணனை

**चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि**
**प्रभिन्नाभिः शम्भोर्नवभिरपि मूलप्रकृतिभिः ।**
**चतुश्चत्वारिंशद्-वसुदल-कलाश्र-त्रिवलय-**
**त्रिरेखाभिः सार्धं तव चरणकोणाः परिणताः ॥११॥**

சதுர்ப்பி: ஸ்ரீகண்டை: சிவ யுவதிபி: பஞ்சபிரபி
ப்ரபிந்நாபி: சம்போர்-நவபிரபி மூலப்ரக்ருதிபி: ।
சதுச்சத்வாரிம்சத்-வஸுதல-கலாச்ர-த்ரிவலய-
த்ரிரேகாபி: ஸார்த்தம் தவ சரணகோணு: பரிணதா: ॥

**சத்தி சிவகோணம் ஐந்து நான்கென்று தனித்தியம்பும்**
**நத்தும் அவ்வொன்பது கோணத்துள் நாற்பத்து நான்கிலகும்**
**சித்தி வலயம் தளம் இரு நான்குடன் சேர்பதினு(று)**
**ஒத்தெழும் வட்டம் சதுரம் உமைபாதம் உற்றனவே.**

பொருள் : சக்தி உருவமான ஐந்து சக்கரங்களும். சிவ உருவமான நான்கு சக்கரங்களும் சேர்ந்து ஒன்பது மூலப்ர கிருதிகளான சக்கரங்களுடன் எட்டு தளங்களும் பதினறு தளங்களும் மூன்று வட்டமான வளையங்களும் மூன்று பூபுர ரேகைகளும் சேர்ந்த-உன் இருப்பிடமான ஸ்ரீ சக்ரத்தின் கோணங்கள் நாற்பத்து நான்காம்.

குறிப்பு : பிந்து 1. திரிகோணம் 1. பின் எட்டுகோணம். உள்கோணம் 10. வெளிக்கோணம் 10. பின் 14 கோணம் ஆக 44 கோணம். பின் 8 தளம், 16 தளம், மூன்று வட்ட ரேகை. பின் நான்கு துவாரமுள்ள பூபுரம் மூன்று. இவையே ஸ்ரீ சக்ரம். உமைபாதம்=பிந்து.

**நிவேதனம் :** வெல்லப் பாயஸம், மஹாநைவேத்தியமும்

12

# தேவி திருவழகு

त्वदीयं सौन्दर्यं तुहिनगिरिकन्ये तुलयितुं
कवीन्द्राः कल्पन्ते कथमपि विरिञ्चि-प्रभृतयः ।
यदालोकौत्सुक्या-दमरललना यान्ति मनसा
तपोभि-र्दुष्प्रापामपि गिरिश-सायुज्य-पदवीम् ॥१२॥

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹிநகிரிகந்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி-ப்ரப்ருதய:।
யதாலோகௌத்ஸுக்யா-தமரலலநா யாந்தி மநஸா
தபோபிர்-துஷ்ப்ராபாமபி கிரிச-ஸாயுஜ்யபதவீம்॥

**ஆதி! உன் மேனி எழில்காண் அவாவில் அமரர்திரு
மாதர், தவத்தும் பெற இயலாச்சிவன் வண்ணமதில்
பேதமில் ஐக்கியம் தான் வேண்டிடுவர்; பிரமனும் இங்(கு)
ஏது தெரிந்துநின் மேனி யழகை இசைப்பதுவே?**

பொருள் : தேவி! உன் அழகைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் அரம்பை, ஊர்வசி முதலிய தேவகன்னிகைகள் கடும் விரதம் புரிந்து சிவஸாயுஜ்யத்தை மனத்தால் அடைகிறார்கள்: இவ்வாறிருக்க நான்முகனும் உன் திருமேனியழகை எங்ஙனம் வருணிக்க இயலும்?

**நிவேதனம் :** தேன்

# தேவி கடைக்கண் நோக்கின் மகிமை

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापाङ्गालोके पतित-मनुधावन्ति शतशः ।
गलद्वेणीबन्धाः कुचकलश-विस्रस्त-सिचया
हठात् त्रुट्यत्काञ्चयो विगलित-दुकूला युवतयः ॥१३॥

நரம் வர்ஷீயாம்ஸம் நயநவிரஸம் நர்மஸு ஜடம்
தவாபாங்காலோகே பதித-மநுதாவந்தி சதச: ।
கலத்வேணீபந்தா: குசகலச-விஸ்ரஸ்த-ஸிசயா
ஹடாத் த்ருட்யத்-காஞ்ச்யோ விகலித-துகூலா யுவதய:॥

நரைசேர் கிழவன் உருவிலி இன்ப நலம் அறியான்
உரைநின் மலர்க்கண் கொழிக்குங் கருணையின் ஊடணுகின்
கரையி லரிவையர், காமன் என எணிக் கார் குழலும்
சரிய உடையும் நழுவ நாண் போயவற் சார்குவரே.

பொருள்: கிழவனாயினும், பார்ப்பதற்குக் குரூபி ஆயினும், சக்தியற்றவனாயினும் உன் கடைக்கண் பார்வையில் அகப்பட்டானாகில் அழகிய இளம் பெண்கள் நாணம் விட்டுத் தலைமயிர் அவிழவும் உடை நழுவவும் ஆசையுடன் அவனைப் பின்தொடர்வர்.

நிவேதனம்: த்ரிமதுரம் அல்லது அன்னம்

# ஆதார சக்கரத்தின் மேலுள்ள தேவி

क्षितौ षट्पञ्चाशद्-द्विसमधिक-पञ्चाश-दुदके
हुताशे द्वाषष्टि-श्चतुरधिक-पञ्चाश-दनिले ।
दिवि द्विःषट्त्रिंशन् मनसि च चतुःषष्टिरिति ये
मयूखा-स्तेषा-मप्युपरि तव पादांबुज-युगम् ॥१४॥

க்ஷிதௌ ஷட்பஞ்சாசத்-த்விஸமதிக-பஞ்சாச-துதகே
ஹுதாசே த்வாஷஷ்டிச் சதுரதிக பஞ்சாச-தநிலே।
திவி த்விஷ் ஷட்த்ரிம்சந்-மநஸி ச சதுஷ்ஷஷ்டிரிதி யே
மயூகா-ஸ்தேஷா-மப்யுபரி தவ பாதாம்புஜ-யுகம்॥

**சேர்க்கும் அறுபதெனும் எண்ணில் நான்கு, திகழுமெட்டு**
**நீக்கி இரண்டுபின் கூட்டி இருமூன்று நீக்கி நிரல்**
**பூக்கும் ஈராறுடன் கூட்டி நான் கேற்றி ஐம் பூத மனத்(து)**
**ஆக்கம் பெறுகதிர் மேற்பொலி யும்தாய் அடிமலரே.**

பொருள்: பூமிதத்வமான மூலாதாரத்தில் 56கிரணங்களும், ஜல தத்வமான மணிபூரகத்தில் 52 கிரணங்களும், அக்னி தத்வமான சுவாதிட்டானத்தில் 62 கிரணங்களும், வாயு தத்வமான அநாஹதத்தில் 54 கிரணங்களும், ஆகாய தத்வமான விசுத்தி சக்ரத்தில் 72 கிரணங்களும், மனஸ் தத்வமான ஆக்ஞா சக்ரத்தல் 64 கிரணங்களும் உள்ளன. அக்கிரணங்களின் மேலான பிரமரந்திரத் தானத்தில் (360 கிரணங்களின் மேல்) உமைபாதம் இருக்கும்.

நிவேதனம்: பால் பாயஸம்

## 15

# கவிதை அளிப்பவள்

शरज्ज्योत्स्ना-शुद्धां शशियुत-जटाजूट-मकुटां
वर-त्रास-त्राण-स्फटिकघटिका-पुस्तक-कराम् ।
सकृन्न त्वा नत्वा कथमिव सतां सन्निदधते
मधु-क्षीर-द्राक्षा-मधुरिम-धुरीणाः फणितयः ॥१५॥

சரஜ்-ஜ்யோத்ஸ்நா சுத்தாம் சசியுத-ஜடாஜுட-மகுடாம்
வர-த்ராஸ-த்ராண-ஸ்படிக கடிகா-புஸ்தக-கராம்।
ஸக்ருந் நத்வா ந த்வா கதமிவ ஸதாம் ஸந்நிதததே
மது-க்ஷீர-த்ராக்ஷா-மதுரிம-துரீணா: பணிதய: ||

**அன்பாய்ச் சரற்காலத் தண்மதி மேனியும் அம்பிறைசேர்**
**பண்பார் முடியும் வராபயம் நூல்நற் பளிங்குவடம்**
**இன்பார் கரம்நான் கிணைஉள் நிணைப்பார் இனித்திடுதேன்**
**நன்பால் அமுதாய் மதுரக் கவிதை நவிலுவரே.**

பொருள்: தேவி! சரத்காலத்துச் சந்திரனைப் போன்ற வெண்மையான உன் திருமேனியையும், சந்திரகலை சேர்ந்த மணிமுடியையும், வரதமுத்திரை, அபயமுத்திரை, புத்தகம் ஸ்படிகமாலை தாங்கும் நான்கு கரங்களையும் ஒருதரம் தியானிப்பவர், தேன், பால், அமிர்தம் இவற்றினும் மதுரமாய் இனிக்கும் கவிதை பாடுவர்.

**நிவேதனம்:** தேன், ப்ழம், சர்க்கரை

# கல்வி அளிப்பவள்

कवीन्द्राणां चेतः कमलवन-बालातप-रुचिं
भजन्ते ये सन्तः कतिचिदरुणामेव भवतीम् ।
विरिञ्चि-प्रेयस्या-स्तरुणतर-शृङ्गारलहरी-
गभीराभि-र्वाग्भि-र्विदधति सतां रञ्जनममी ॥१६॥

கவீந்த்ராணும் சேத:-கமலவன-பாலாதப-ருசிம்
பஜந்தே யே ஸந்த: கதிசிதருணு-மேவ பவதீம் |
விரிஞ்சி-ப்ரேயஸ்யாஸ்-தருணதர-ச்ருங்காரலஹரீ
கபீராபிர்-வாக்பிர்-விதததி ஸதாம் ரஞ்ஜனமமீ ||

**இன்சொற் கவிஞர் மன நளி னத்தின் இதழ் மலர்த்தும்**
**இன்ப இளவெயில் காந்தி அருணம் இலங்கு நினை**
**உன்னி உணர்பவர் வெண்ணிற வாணி உவகையலை**
**மன்னுங் கலை நலத்தால் இவ்வுலகை மகிழ்விப்பரே.**

பொருள்: கவிஞர்களின் மனத் தாமரையை மலர் விக்கும் இளவெய்யில் காந்தியும், சிவப்பு நிறமும் கொண்ட நின்னைத் தியானிப்பவர், கலைமகளின் சிருங்கார ரசப் பெருக்குப் போன்ற சொல்வன்மை உண்டாகித் தம் கலை ஞானத்தால் இவ்வுலகை மகிழ்விப்பார்கள்.

குறிப்பு: இங்குக் குறிக்கப்பட்டவள் 'அருணை' என்ற தேவி; கரம் எட்டு உடையவள்; பாசம், அங்குசம், அம்பு, வில், வரம், அபயம், புத்தகம், படிகமாலை தாங்கியவள்.

**நிவேதனம்:** தேன்

# காவியம் இயற்ற விரும்பினோர் தியானிக்குமியல்பு

सवित्रीभि-र्वाचां शशि-मणि-शिला-भङ्ग-रुचिभि-
र्वशिन्याद्याभि-स्त्वां सह जननि संचिन्तयति यः ।
स कर्ता काव्यानां भवति महतां भङ्गिरुचिभि-
र्वचोभि-र्वाग्देवी वदन कमलामोद मधुरैः ॥ १७॥

ஸவித்ரீபிர் வாசாம் சசிமணி-சிலா–பங்க–ருசிபி:
வசின்யாத்யாபிஸ்–த்வாம் ஸஹ ஜனனி! ஸஞ்சிந்தயதி ய:
ஸ கர்த்தா காவ்யானும் பவதி மஹதாம் பங்கருசிபி:
வசோபிர்–வாக்தேவீ–வதன - கமலாமோத–மதுரை: ||

**இந்து நிறங்கொளும் வாக்கினர் எண்மர் எழில்வசினி**
**முந்து வனிதையர் சூழும்பரை! நினை முன்னுபவர்**
**சுந்தர வாணி முகத்துப் பரிமளம் தோய் கவியால்**
**சிந்தை திறைகொளுந் தேன் மொழிக் காப்பியம் செய்குவரே**

பொருள்: சந்திரனைப் போன்ற வெண்மையான வாக்கின் தேவதைகளான 'வசினீ' முதலிய வாக் தேவதைகளால் சூழப்பட்டவளாக உன்னைத் தியானிக்கின்றவர், சரசுவதியின் முககமலத்திலிருந்து வீசும் நறுமணம் போன்ற புலவர் போற்றுங் கவிகளால் பெருங் காப்பியங்களை இயற்றும் வன்மையுள்ளவராவர்.

குறிப்பு: வாக்தேவதைகள் எண்மர்:வசினி, காமேச்வரி மோதினி, விமலை, அருணை ஜயினீ,ஸர்வேசி, கௌலினி. ஸ்ரீ சக்ரத்தில் நடுமுக்கோணத்தருகே சுற்றிலும் 8 முக் கோணத்தில் இருப்பவர்கள்.

**நிவேதனம்:** பால், தேன், கரும்பு, சர்க்கரை

# செந்நிற காந்தியில் செகம் அமிழ்த்துபவள்

तनुच्छायाभिस्ते तरुण-तरणि-श्रीसरणिभि-
र्दिवं सर्वा-मुर्वी-मरुणिम-निमग्नां स्मरति यः ।
भवन्त्यस्य त्रस्य-द्वनहरिण-शालीन-नयनाः
सहोर्वश्या वश्याः कतिकति न गीर्वाण-गणिकाः ॥१८

தனுச்சாயாபிஸ்–தே தருண-தரணிஸ்ரீ ஸரணிபி:
திவம் ஸர்வா முர்வீ-மருணிமநிமக்னும் ஸ்மரதி ய: |
பவந்த்யஸ்ய த்ரஸ்யத்–வந-ஹரிண-சாலீன நயனு:
ஸஹோர்வச்யா வச்யா: கதிகதி ந கீர்வாண கணிகா: ||

**உன்றன் நிறமாம் இளங்கதிர்ப்பானு ஒளிர் சிவப்பில்
நின்றிவ் வுலக முழுகு நலம் உள் நினேபவரை
வென்றிப் பிணே விழி ஊர்வசி யாஞேர் விழைகுவரால்;
ஒன்ருய் அரும்பிப் பலவாய் விரிந்த ஒளிப் பொருளே!**

பொருள்: பேரொளிப் பொருளே! உதயசூரியன் வெயிலைப்போல் சிவந்த வர்ணமுள்ள உன் தேக காந்தியால் மேலுலகங்களும் பூவுலகும் சிவப்பு வர்ணத்தில் மூழ்கி விட்டதாகத் தியானம் புரியும் பக்தனுக்கு, மான் போன்ற மருண்ட விழிகளை உடைய ஊர்வசி முதலிய தேவ கன்னியரும் வசியமாவர்.

**நிவேதனம்:** பாயசம், பால், தாம்பூலம்

## மூவுலக வசியம் தருபவள்

मुखं बिन्दुं कृत्वा कुचयुगमध-स्तस्य तदधो
हरार्धं ध्यायेद्यो हरमहिषि ते मन्मथकलाम् ।
स सद्यः संक्षोभं नयति वनिता इत्यतिलघु
त्रिलोकीमप्याशु भ्रमयति रवीन्दु-स्तनयुगाम् ॥१९॥

முகம் பிந்தும் க்ருத்வா குசயுக-மதஸ்-தஸ்ய தததோ
ஹரார்த்தம் த்யாயேத் யோ ஹரமஹிஷி தே
மன்மதகலாம் |
ஸ ஸத்ய: ஸங்க்ஷோபம் நயதி வநிதா இத்யதிலகு
த்ரிலோகீ-மப்யாசு ப்ரமயதி ரவீந்து-ஸ்தனயுகாம் ||

**அளியார் கமலத்தில் அம்பிகை! விந்துநல் லானனமே
ஒளி சேர் அதன்கீழ், இணைகில், கீழாக யோனி அதில்
தெளிவுடன் சிந்தித்துக் காம கலையைச் செபித்திடுவோர்
வளிசேர் சுடர்முலைப் பூமி மகளை மயல் செய்வரே.**

பொருள் : உன் திருமுகத்தைப் பிந்துவாகவும் அதன் கீழே ஸ்தனங்களையும், அதன் கீழே உன் பெண்மையான சக்தி ஸ்வரூபத்தையும், பிறகு காம கலையையும் தியானம் செய்பவர், சூரிய சந்திரர்களை ஸ்தனங்களாகக் கொண்ட மூவுலகங்களாகிய பெண்களை மோகிக்கச் செய்வார். காமகலை=காம ராஜ பீஜம்.

**நிவேதனம் :** தேன், பால், பாயசம்

# விஷபயம் நீக்கும் சக்தி

किरन्ती-मङ्गेभ्यः किरण-निकुरुम्बामृत-रसं
हृदि त्वा-माधत्ते हिमकरशिला-मूर्तिमिव यः ।
स सर्पाणां दर्पं शमयति शकुन्ताधिप इव
ज्वरप्लुष्टान् दृष्ट्या सुखयति सुधाधारसिरया ॥२०

கிரந்தீ-மங்கேப்ய: கிரண—நிகுரும்பாம்ருத-ரஸம்
ஹ்ருதி த்வா—மாதத்தே ஹிமகர—சிலா—மூர்த்திமிவ ய: |
ஸ ஸர்ப்பாணும் தர்ப்பம் சமயதி சகுந்தாதிப இவ
ஜ்வரப்லுஷ்டான் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதார
ஸிரயா ||

பொங்கு கிரணம் பரவி அமுதம் பொழிபவளாய்த்
தங்கெழில் சந்திர காந்தச் சிலையுருச் சார்ந்த நினைக்
கங்குல் பகல் நினைப்பார் விடந்தீர்ப்பர் கலுழனைப்போல்
மங்கை! அமுதம் பொழிவிழியால் சுரம் மாய்ந்திடுமே.

பொருள் : தாயே! சந்திரகாந்தச் சிலையால் செய்யப் பெற்ற பிரதிமை போன்றவளும், திருமேனியிலிருந்து வெளிப்படும் கிரணங்களாகிய அமிர்த ரசத்தை அள்ளி வீசுபவளுமான நின்னைத் தியானம் புரிபவர் கருடனைப் போலப் பாம்பு விடத்தை நீக்குவார்; தன்பார்வையாலேயே சுரம் நீக்கிக் குணமடையச் செய்வார்.

**நிவேதனம் :** *பால் பாயஸம்*

## 21

# நிட்டையில் தியானிக்குமியல்பு

तटिल्लेखा-तन्वीं तपन-शशि-वैश्वानर-मयीं
निषण्णां षण्णामप्युपरि कमलानां तव कलाम् ।
महापद्माटव्यां मृदित-मलमायेन मनसा
महान्तः पश्यन्तो दधति परमाह्लाद-लहरीम् ॥२१॥

தடில்லேகா தன்வீம் தபநசசி–வைச்வாநர-மயீம்
நிஷண்ணும் ஷண்ணு-மப்யுபரி கமலானும் தவ கலாம்
மஹாபத்மாடவ்யாம் ம்ருதித–மல-மாயேந மநஸா
மஹாந்த: பச்யந்தோ தததி பரமாஹ்லாத-லஹரீம் ||

**மின்னற் கொடி போல் விளங்கிக் கதிரோன் விதுவொடங்கி**
**மன்னும் உருவுடன் முண்டகம் ஆறின் வழிகடந்தே**
**உன்னும் இதழாயிரத் தாமரையுள் ஒளிர் கலையைப்**
**பன்னு மெய்ஞ் ஞானியர் தூய மனத்தால் பருகுவரே.**

பொருள் : மின்னற்கொடி போன்றதும், சூரியன், சந்திரன், அக்கினி என்னும் உருவில் உள்ளதும், ஆறு கமலங்களுக்கு மேலுள்ள ஸஹஸ்ரார கமலத்தில் அமர்ந்ததும் ஆன உன் கலையை('ஸாதா' என்ற பிந்து வடிவமான கலை) மலமும் மாயையும் நீங்கிய மனத்தால் மஹான்கள் தியானம் புரிந்து பேரானந்த வெள்ளத்தில் திளைப்பார்கள்.

குறிப்பு :– சூரியன் முதலிய மூன்று தத்துவமும் இக்கலையின் விபூதி. உபாசகர் உள் இருள் கடிதல், தாபநிவிருத்தி, பாசகர்மாவைப் புண்யகர்மாவாகப் பக்குவம் செய்தல் வழியாகப் பேரானந்தமடைவர்.

**நிவேதனம் :** தேனும், பழமும்

## 22

# தேவியைத் துதிப்பதன் பயன்

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणां
इति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वमिति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्य-पदवीं
मुकुन्द-ब्रह्मेन्द्र-स्फुट-मकुट-नीराजितपदाम् ॥ २२ ॥

பவாநி! த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணம்
இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவாநி த்வமிதி ய: ।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜ ஸாயுஜ்ய–பதவீம்
முகுந்த–ப்ரஹ்மேந்த்ர ஸ்புட-மகுட-நீராஜித–பதாம் ॥

**அன்னே! ''பவானி நீ என்பால் அருள் நோக் கருள்க''எனப்**
**பன்ன விரும்பிப் 'பவானி நீ' என்று பகர்ந்தளவில்**
**அன்றப் பொழுதே மகவான் அயன் மால் அணி முடிகள்**
**மன்னு மணிவிளக் கேற்றும் அடிப்பூ வழங்குவையே**

பொருள்:- ஹே பவானி, நீ உன் அடிமையாம் என்னைக் கருணையுடன் கூடிய கடைக் கண்ணால் பார்ப்பாயாக' என்று துதி செய்ய விரும்பிய ஒருவன் ''ஹே பவானி, நீ'' என்று சொல்லத் தொடங்கியவுடனே, அவனுக்கு அப்போதே இந்திரன், பிரமன், திருமால் இவர்களின் கிரீடங்களால் மங்களாரத்தி செய்யப்பெற்ற திருவடிகளுடன் கூடிய உன் ஸாயுஜ்ய பதவியையே அளித்து விடுகின்ருய்.

**நிவேதனம்: சித்ரான்னங்கள்.**

## 23

# சக்தி தத்துவ மகத்துவம்

त्वया हृत्वा वामं वपु-रपरितृप्तेन मनसा
शरीरार्धं शंभो-रपरमपि शङ्के हृतमभूत् ।
यदेतत् त्वद्रूपं सकलमरुणाभं त्रिनयनं
कुचाभ्यामानम्रं कुटिल-शशिचूडाल-मकुटम् ॥२३॥

த்வயா ஹ்ருத்வா வாமம் வபு–ரபரித்ருப்தேன மனஸா
சரீரார்த்தம் சம்போ-ரபரமபி சங்கே ஹ்ருதமபூத் |
யதேதத் த்வத்ரூபம் ஸகல–மருணபம் த்ரிநயனம்
குசாப்யா–மாநம்ரம் குடில–சசி–சூடால–மகுடம் ||

**செங்கதிர் மேனி சொரியும்; விழிமூன்று சேர்ந்தொளிரும்**
**கொங்கை இரண்டால் உடல் கூனும்; நீள்முடிக்**
**கொண்டைதனில்**
**தங்கும் இளம்பிறை; பாதி உடலை நீ தான் கவர்ந்தும்**
**கொங்கலர் பூங்குழலாய்! வலப்பாகமுங் கொண்டனையே.**

பொருள்: தாயே! என் இதயத்திலுள்ள உன் உருவ முழுதுமே சிவப்பாகவும் மூன்று கண்களையுடையதாயும், இரண்டு தனங்களால் சற்று வணங்கியதாயும், சந்திரகலை தங்கும் முடியையுடையதாயும் விளங்குவதால், நீ பரமசிவன் இடப்பாகத்தைக் கவர்ந்தும் மனம் திருப்தி அடையாமல் மற்றொரு பாதியையும் அபகரித்துக் கொண்டாய் என நினைக்கிறேன்.

குறிப்பு :- சக்தி அம்சத்தில் சிவாம்சம் அடங்கிவிட்டது என்பது புலனும்.

**நிவேதனம் :** உளுந்துவடை, பாயசம்

# தேவியின் புருவ அசைவு

जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्व-न्नेतत् स्वमपि वपु-रीश-स्तिरयति ।
सदा-पूर्वः सर्वं तदिद-मनुगृह्णाति च शिव-
स्तवाज्ञा-मालम्ब्य क्षणचलितयो-र्भ्रूलतिकयोः ॥२४॥

ஜகத் ஸூதே தாதா ஹரி-ரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வன்-நேதத் ஸ்வமபி வபு-ரீசஸ்-திரயதி
ஸதா பூர்வ: ஸர்வம் ததித-மநுக்ருஹ்ணாதி ச சிவ:
தவாஜ்ஞா மாலம்ப்ய க்ஷண சலிதயோர்-ப்ரு-லதிகயோ:

**ஆதி! பிரமன் உலகினை யாக்குவன்; அச்சுதனே**
**மேதினி காத்திடுவான்; சிவன் நீக்கும் வினைபுரிவான்;**
**மாதே! மகேசன் மறைத்திடுவான் அச் சதாசிவனே**
**ஆதியனைத்தும் அருள்வான் நின் பூருவின் ஆணைபெற்றே.**

பொருள் : ஆதி சக்தியே! பிரமன் உலகைப் படைக்கிறான்; திருமால் காக்கிறான்; ருத்திரன் அழிக்கிறான்; இவரினும் மேற்பட்ட மகேச்வரன் மேற்கண்ட மூவரையும் தன் சொருபத்தில் மறையும்படி செய்து தன் உடலையும் மறைத்துக் கொள்கிறான்; ஸதாசிவன் என்பவன் (பரப்பிரமம்) உன் புருவஅசைவின் ஆணைபெற்று மறுபடியும் அயன், மால், ருத்திரன், மகேச்வரன் என்ற நான்கு தத்துவங்களையும் படைக்கிறான்.

**நிவேதனம்:** எள்சாதம் (இனிப்பாக), உளுந்தவடை, தேன்

25

## தேவி பூசையின் சிறப்பு

**त्रयाणां देवानां त्रिगुण-जनितानां तव शिवे**
**भवेत् पूजा पूजा तव चरणयो-र्या विरचिता ।**
**तथा हि त्वत्पादोद्वहन-मणिपीठस्य निकटे**
**स्थिता ह्येते शश्वन्मुकुलित-करोत्तंस मकुटाः ॥२५॥**

த்ரயாணும் தேவாஞம் த்ரிகுண-ஜநிதாஞம் தவ சிவே ।
பவேத் பூஜா பூஜா தவ சரணயோர்-யா விரசிதா ।
ததா ஹி த்வத்-பாதோத்வஹன-மணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே சச்வன்-முகுலித-கரோத்தம்ஸ-மகுடா:

**மூவர் குணமூன் றுதித்தவர் சென்னி முகிழ்த்திடுகை**
**தாவில் மணி முடி தாங்கி நின் சேவடி தாழ்ந்து நிற்பர்;**
**தேவி! நின் பாதாம் புயத்துச் சொரிந்திடு தேன்மலர், அத்**
**தேவர் மணிமுடி தம்முளுஞ் சேர்ந்து திகழ்வுறுமே.**

பொருள்: தேவி! சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் தோன்றிய பிரமன், திருமால், ருத்திரன் ஆகிய மூவரும், உன் திருவடிகளைத் தாங்கும் ரத்னபீடத் தருகே எப்போதும் தம் மணிமுடிகள் மீது கை கூப்பிக் கொண்டு நின்று சேவித்து நிற்பர்; எனவே நின் திருவடி களைப் பூசித்தாலே அவர்களையெல்லாம் ஒருசேரப் பூசித்த தாக ஆகிவிடுமன்றோ?

**நிவேதனம் : தேன்**

# ஸ்ரீ ஸதாசிவன் மஹிமை

विरिञ्चिः पञ्चत्वं व्रजति हरिराप्नोति विरतिं
विनाशं कीनाशो भजति धनदो याति निधनम् ।
वितन्द्री माहेन्द्री विततिरपि संमीलित-दृशा
महासंहारेऽस्मिन् विहरति सति त्वत्पति-रसौ ॥२६॥

விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்
விநாசம் கீனசோ பஜதி தனதோ யாதி நிதனம் ।
விதந்த்ரீ மாஹேந்தரீ விததிரபி ஸம்மீலித-த்ருசா
மஹா-ஸம்ஹாரேsஸ்மிந் விஹரதி! ஸதி த்வத்பதி
ரஸௌ ॥

**கஞ்சன் முகுந்தன் தருமன் தனதன் கருதும் எண்மர்**
**எஞ்சலில் ஈரேழ் மனுவந் தரத்துவாழ் இந்திரரும்**
**துஞ்சும் அப்பேருழிக் காலத்தும் நின்றன் துணைவர், அருள்**
**விஞ்சும் சதி! உனைக் கூடிக் களிப்பர்; நின்மேன்மையிதே.**

பொருள், சதியே! மஹாப்ரளய காலத்தில் பிரமன், திருமால், யமன் குபேரன் முதலிய திசைப்பாலகர், 14 மநுவந்தரங்களில் ஏற்பட்ட 14 இந்திரர்கள் அனைவரும் அழிகிறார்கள்; ஆனால் சதியாம் உன் பாதிவிரத்திய மகிமையால் ஸதாசிவனான உன் கணவன் மட்டும் அவ்வூழிக்காலத்தும் அழியாமல் உன்னுடன் க்ரீடை புரிகின்றான்.

**நிவேதனம்:** *சர்க்கரைப் பொங்கல்*

# ஆறு விதமான ஐக்யத்தியானம்

जपो जल्पः शिल्पं सकलमपि मुद्राविरचना
गतिः प्रादक्षिण्य-क्रमण-मशनाद्याहुति-विधिः ।
प्रणामः संवेशः सुखमखिल-मात्मार्पण-दृशा
सपर्या-पर्याय-स्तव भवतु यन्मे विलसितम् ॥२७॥

ஜபோ ஜல்ப:சில்பம் ஸகலமபி முத்ராவிரசனு
கதி: ப்ராதக்ஷிண்ய-க்ரமண-மசனுத்யாஹுதி-விதி: ।
ப்ரணும: ஸம்வேச: ஸுகமகில-மாத்மார்ப்பண-த்ருசா
ஸபர்யா-பர்யாயஸ்-தவ பவது யன்மே விலஸிதம் ॥

**அகத்தொளியே! என் மொழிகள் சபமாயமைந்திடுக!**
**இகத்தே அனைத்துக் கரத்தொழில் முத்திரை என்றுறுக;**
**சகத்தே நடப்பன நின்னை வலம் வரல்; சாரும் உண**
**மகத்தாகுதியாய்க் கிடத்தல் வணக்கமாய் மன்னுகவே.**

*பொருள் : ஆத்மார்ப்பண புத்தியைத் தூண்டிக் கொண்டிருக்கும் ஒளிவடிவே! 'அனைத்தும் உனக்கு அர்ப்பணம்' என்ற நோக்குடன் நான் பேசுவதெல்லாம் உன் மந்த்ர ஜபம் ஆகவும், கர அசைவுகள் முத்திரைகளாகவும் என் நடைகள் உன் பிரதட்சிணமாகவும், நான் புசிப்பதெல்லாம் உனக்குச் செய்யும் ஹோமமாகவும், நான் படுப்பது உனக்குச் செய்யும் நமஸ்காரமாகவும் ஆகட்டும்!*

குறிப்பு :– தான் ஆன்மாவைத் தேவியிடம் அர்ப்பணம் செய்து சக்தியையையும் தன்னையும் ஒன்ருய் அறிதல், ஜபம், முத்திரை, ஹோமம், பிரதட்சிணம் நமஸ்காரம்— இவை ஆறு விதமான ஐக்யத் தியானம்.

**நிவேதனம் :** *பால்*

# தேவியின் காதணியின் மகிமை

सुधामप्यास्वाद्य प्रति-भय-जरामृत्यु-हरिणीं
विपद्यन्ते विश्वे विधि-शतमखाद्या दिविषदः ।
करालं यत् क्ष्वेलं कबलितवतः कालकलना
न शम्भोस्तन्मूलं तव जननि ताटङ्क-महिमा ॥२८॥

ஸுதா மப்யாஸ்வாத்ய ப்ரதிபய-ஜராம்ருத்யு-ஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதி-சுதமகாத்யா திவிஷத: |
கராலம் யத்-க்ஷ்வேலம் கபலிதவத: காலகலனு
ந சம்போஸ்-தன் மூலம் தவ ஜநநி! தாடங்க மஹிமா ||

**அழிவு நரை திரை முற்ற ஒழிக்கும் அமுதருந்தும்**
**வழியும், திசைமுகன் இந்திரன் வானேர் மடிந்திடுவர்;**
**அழலும் விழியரன் ஆலம துண்டும் அழிந்திலனுல்;**
**குழையைத் தழுவிய பொன்னேலை மாண்பெனக் கூறுவனே.**

பொருள் ; பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள், நரை, திரை, மரணம் இவற்றைப் போக்கும் அமிருதத்தைப் பருகிய போதும் பிரளய காலத்தில் அழிந்து விடுகின்றனர்; ஆனல் மிகக் கொடிய ஆலகால விடத்தைப் பருகிய பரம சிவனே என்றால் ஊழிக் காலத்தும் அழிவதில்லை; இதற்குக் காரணம் பதிவிரதையான நீ செவிகளில் பூண்ட 'தாடங்கம்' என்ற காதணியின் மகிமை தான்.

**நிவேதனம் :** பால் பாயஸம், த்ரிமதுரம், தாம்பூலம்

# ஸ்ரீ பரமேச்வரன் மகிமை

किरीटं वैरिञ्चं परिहर पुरः कैटभभिदः
कठोरे कोटीरे स्खलसि जहि जंभारि-मकुटम् ।
प्रणम्रेष्वेतेषु प्रसभ-मुपयातस्य भवनं
भवस्याभ्युत्थाने तव परिजनोक्ति-र्विजयते ॥ २९॥

கிரீடம் வைரிஞ்சம் பரிஹர புர: கைடபபித:
கடோரே கோடீரே ஸ்கலஸி ஜஹி ஜம்பாரி-மகுடம் ।
ப்ரணம்ரேஷ்வேதேஷு ப்ரஸப-முபயாதஸ்ய பவனம்
பவஸ்யாப்யுத்தானே தவ பரிஜனோக்திர்-விஜயதே ॥

**மாலயன் இந்திரன் கூடி வணங்கும் வழிதனிலுன்**
**பால் வருங்காமே சனை யெதிர் கொள்ளப் பரிந்துசெலுங்**
**கால். உன்பரிசனம் ''ஈதிவர் மௌலி: கடினமிது;**
**சால இடறும்; வழிநோக்'' கெனுஞ் சொல் தழைத்திடுமே**

பொருள் : பகவதி! பிரமனும் திருமாலும் இந்திரனும் உன்னைத் தினமும் வணங்க வருகின்றனர். இவர்கள் உன்னை வணங்கிக் கொண்டிருக்கும் பொழுது உன் அரண்மனை நோக்கி வருகிற பரமேச்வரனை எழுந்து வரவேற்குங் காலத்தில், உன் பணிப்பெண்கள், ''அம்மா இது பிரமன் கிரீடம்; ஒதுக்குக; இது திருமால் முடி; கடினம் மிக்கது; ஒதுங்கி நடப்பீராக; இந்திரன் மகுடத்தை அகற்றுக; வழி நோக்கி வருக'' என்று கூறுஞ் சொற்கள் மிகச் சிறப்புடையதாய் விளக்குகின்றன.

**நிவேதனம் :** சர்க்கரைப் பொங்கல்

# தேவியுடன் ஒன்றிவிடுதலின் பயன்

स्वदेहोद्भूताभि- र्घृणिभि-रणिमाद्याभि-रभितो
निषेव्ये नित्ये त्वा-महमिति सदा भावयति यः ।
किमाश्चर्यं तस्य त्रिनयन-समृद्धि तृणयतो
महासंवर्ताग्निः विरचयति नीराजन विधिम् ॥३०॥

ஸ்வதேஹோத்பூதாபிர்-க்ருணிபி-ரணிமாத்யாபி-ரபிதோ
நிஷேவ்யே நித்யே த்வாம் அஹமிதி ஸதா பாவயதி ய: |
கிமாஸ்சர்யம் தஸ்ய த்ரிநயந-ஸம்ருத்திம் த்ருணயதோ
மஹாஸம்வர்த்தாக்னிர்-விரசயதி நீராஜன-விதிம் ||

**தேவி! நின் மேனி தனிலுற் பவித்த எண் சித்திகள் சூழ்**
**மேவு நினைத் தன தான்மா எனக்காண் விருத்திதனில்**
**ஆவலுடன் தோய்ந்தமுந்தி நுகர் மெய்யறிவினர்க்கே**
**ஆ! அரன் செல்வம் புல் பேரூழி அங்கியும் ஆலத்தியே.**

பொருள் : தேவி! உன் ஒளி வடிவத்திலிருந்து உண்டான கிரணஸ்வருபங்களான 'அணிமா' முதலிய எட்டு சித்திதேவதைகளால் நாற்புறமும் சூழப்பட்டிருக்கும் உன்னைத் தன் ஆத்மா என்று எப்போதும் தியானம் செய்பவன் பரமமேசுவரனுடைய ஐச்வர்யத்தையும் த்ருணமாக நினைப்பான்; அவனுக்குப் பிரளய காலத்து அக்னியும் மங்கள ஆரத்தி செய்யும்.

குறிப்பு :-

அருணும் கருண தரங்கி தாக்ஷீம் த்ருத பாசாங்குச
புஷ்ப பாண சாபாம் |
அணி மாதிபி ராவ்ருதாம் மயூகை: அஹமித்யேவ
விபாவயே பவானீம் ||

என்ற தியான சுலோகத்தை கண்டு ஒப்பு நோக்குக.

**நிவேதனம் :** தேன், வெல்லப்பொங்கல், த்ரிமதுரம் தாம்பூலம்

# தேவியின் தந்திரங்கள் (சாத்திர நூல்கள்)

**चतुः-षष्टचा तन्त्रैः सकल-मतिसन्धाय भुवनं**
**स्थितस्तत्तत्-सिद्धि-प्रसव-परतन्त्रैः पशुपतिः ।**
**पुनस्त्व-न्निर्बन्धा दखिल-पुरुषार्थैक-घटना-**
**स्वतन्त्रं ते तन्त्रं क्षितितल-मवातीतर-दिदम् ॥३१॥**

சது:ஷஷ்ட்யா தந்த்ரை:ஸகல-மதிஸந்தாய புவனம்
ஸ்திதஸ் தத்தத்-ஸித்தி ப்ரஸவ-பரதந்த்ரை: பசுபதி; ।
புனஸ்-த்வந்நிர்பந்தா தகில-புருஷார்த்தைக-கடனா-
ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதல-மவாதீதர-திதம் ॥

**நறைமலர்க் கொம்பே! பசுபதி, நீர்தவழ் நானிலத்தைக்**
**குறையார் அறுபானுன் காங்கலை ஞானங்கொடு மயக்கி**
**முறையே உனதே வலின் உன் சுபாகமம் மூதுலகில்**
**நிறைவாய் விளைத்துப் பயன் கூட்டியதும் நினதருளே.**

*பொருள் :* *பரமசிவன், பலவிதமான ஸித்திகளைத் தரக் கூடிய 'மஹா மாயா சம்பரம்' முதலான 64 தந்திரங்களால் (சாஸ்திரங்கள்) உலகை ஏமாற்றி விட்டுப் பேசாமல் இருந்துவிட்டார்; ஆனால் அவரே நீ செய்த நிர்ப்பந்தத்தால் அவற்றுலடையும் பிறவிப்பயன் எல்லாம் ஒருங்கே தரும் சுபாகமத்தை (அடுத்த செய்யுளில் வரும் பஞ்சதசீ என்ற வித்யையைப்) பூ மண்டலத்தில் பிரகாசமாகச் செய்ததும் நின் அருளேயாம்.*

நிவேதனம் *பால், தேன், பழம்*

# தேவியின் மந்திரம்

शिवः शक्तिः कामः क्षिति-रथ रविः शीतकिरणः
स्मरो हंसः शक्र-स्तदनु च परा-मार-हरयः ।
अमी हृल्लेखाभि-स्तिसृभि-रवसानेषु घटिता
भजन्ते वर्णास्ते तव जननि नामावयवताम् ॥३२॥

*சிவ: சக்தி: காம: க்ஷிதி-ரத ரவி: சீதகிரண:*
*ஸ்மரோ ஹம்ஸ: சக்ரஸ்-ததனு ச பரா-மார-ஹரய:।*
*அமீ ஹ்ருல்லேகாபிஸ்-திஸ்ருபி-ரவஸானேஷு கடிதா*
*பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜநநி! நாமாவயவதாம் ||*

**சிவமொடு சத்தி மதன் புவி பின் ரவி சீதமதி**
**தவமதன் வான் இந்திரன் பின் பரை மதன் சக்கரத்தோன்**
**இவருமுக் கண்டமாய் அந்தத்தில் மாயை மூன்றேற்றுவரின்**
**சிவை! அவை உன்திரு நாமத் துறுப்பெனச்செப்பு வரே.**

*பொருள் : இப்பாடலில் குறிக்கப்பெற்ற மந்திரம் ''ஸ்ரீமத் பஞ்சாக்ஷரீ'' என்னப்படும் மந்திரத்தில் அமைந்த அக்ஷரங்கள் சிவன், சக்தி, காமன், பூமி என்ற சொற்களால் ரகசியமாக விளக்கப்படுகின்றன; அதாவது சிவன் (க) சக்தி(ஏ) காமன் (ஈ) பூமி (ல) இந்த 4 அக்ஷரங்கள் சேர்ந்த முதல் பாகம் அக்னி கண்டம் இதன் முடிவில் மாயாபீஜம் (ஹ்ரீம்). பின் ரவி (ஹ) மதி (ஸ) காமன் (க) ஆகாசம் (ஹ) இந்திரன் (ல) இந்த 5 அக்ஷரங்கள் சேர்ந்த 2 வது பாகம் சூர்யகண்டம். இதன் முடிவில் மாயாபீஜம் (ஹ்ரீம்). பின் பரா(ஸ) காமன்(க) ஹரி (ல) இந்த 3 அக்ஷரங்கள் சேர்ந்த 3 வது பாகம் சந்திர கண்டம். இதன் முடிவில் மாயாபீஜம் (ஹ்ரீம்) ஆக இந்த 15 அக்ஷரங்களும் மஹாத்ரிபுர சுந்தரீ மஹாமந்திரத்தின் பகுதிகள் ஆகின்றன.*

**நிவேதனம் :** *சக்கரைப் பொங்கல், உளுந்துவடை, தயிர்சாதம்*

# தேவியின் மந்திரம்

स्मरं योनिं लक्ष्मीं त्रितय-मिद-मादौ तव मनोः
निधायैके नित्ये निरवधि-महाभोग रसिकाः ।
भजन्ति त्वां चिन्तामणि-गुणनिबद्धाक्ष-वलयाः
शिवाग्नौ जुह्वन्तः सुरभिघृत-धाराहुति-शतैः ॥३३॥

ஸ்மரம் யோநிம் லக்ஷ்மீம் த்ரிதய-மித-மாதௌ தவ மனோ:
நிதாயைகே நித்யே நிரவதி-மஹாபோக-ரஸிகா: |
பஜந்தி த்வாம் சிந்தாமணி-குண நிபத்தாக்ஷ-வலயா:
சிவாக்நௌ ஜுஹ்வந்த: ஸுரபிக்ருத-தாராஹுதி
சதை: ||

**ஆனந்த வெள்ள நிகரும் விழைவினர் ஆதிவித்தை**
**தானதன் முன் மாரன் யோனி திருமகள் சார அமைத்**
**தானினெய் ஓமம் சிவத்தழற் குட்புரிந்தான்ற வண்மைக்**
**கான மணி மாலை கைக்கொண்டுருவேற்றி ஆர்குவரே.**

பொருள்: (இங்கு 'ஸௌபாக்ய பஞ்ச தசி' என்ற மந்திரம் குறிக்கப்பட்டுள்ளது) ஆனந்த ரஸத்தைப் பருகும் யோகீச்வரர்கள், தம் கையில் தாம்ர மணி மாலையைத் தரித்துக்கொண்டு, 'பஞ்சதசி' என்ற மந்திரத்துக்கு முதலில் க்லீம், ஹ்ரீம், ஸ்ரீம் என்ற பீஜாக்ஷரங்களைச் சேர்த்து இம் மகாமந்திரத்தைத் திரிகோண வடிவாகிய சிதக்னியில் பசு நெய்யால் ஹோமம் செய்து உன்னைத் திருப்தி செய்விக்கின்றனர்.

**நிவேதனம்:** தேன், வெண்பொங்கல், சித்ரான்னம்

# சக்தி சிவ ஸமத்துவம்

**शरीरं त्वं शंभोः शशि-मिहिर-वक्षोरुह-युगं**
**तवात्मानं मन्ये भगवति नवात्मान-मनघम् ।**
**अतः शेषः शेषीत्यय-मुभय-साधारणतया**
**स्थितः संबन्धो वां समरस-परानन्द-परयोः ॥३४॥**

சரீரம் த்வம் சம்போ: சசி-மிஹிர-வக்ஷோருஹ-யுகம்
தவாத்மானம் மன்யே பகவதி! நவாத்மான-மனகம்|
அத: சேஷ: சேஷீத்யய-முபய-ஸாதாரணதயா
ஸ்த்தித: ஸம்பந்தோ வாம் ஸமரஸ-பராநந்த-பரயோ: ||

**காண்டகும் ஒன்பான் உடல் கொளுஞ் சம்பு, கதிர் மதியம்**
**ஆண்ட நகில் கொளும் நின்வடிவே; நீ அவன்வடிவே;**
**பூண்ட ஆனந்தம் சமமாம் பரன் பரை போலு நுமக்**
**காண்டான் அடிமைத் திறன் பொதுவாகி அமைந்திடுமே.**

பொருள்: நீர் ஒன்பது வ்யூஹ ஸ்வரூபியான பரம சிவனுக்குச் சூரிய சந்திரர்களைத் தனங்களாகக் கொண்ட சரீரமாக இருக்கிறீர்; ஆனந்த பைரவியான உம் ஸ்வரூபத்தை ஆனந்த பைரவனுகிய பரமசிவனின் 9 ஸ்வரூபமாக நினைக்கிறேன்; ஆக யோசிக்குமிடத்து உங்கள் இருவர்க்கும் இடையே உள்ள சேஷ சேஷிபாவம் (ஒருவர் உடலாகவும் மற்றொருவர் ஆன்மாவாகவும் இருத்தல்) சமமே என்று தோன்றுகிறது.

**நிவேதனம்** நெய்யில் கலந்த மிளகுப்பொடி, தேன்

# ஸகலதத்வமயரூபிணி

मनस्त्वं व्योम त्वं मरुदसि मरुत्सारथि-रसि
त्वमाप-स्त्वं भूमि-स्त्वयि परिणतायां न हि परम् ।
त्वमेव स्वात्मानं परिणमयितुं विश्व-वपुषा
चिदानन्दाकारं शिवयुवति-भावेन बिभृषे ॥३५॥

மனஸ்த்வம் வ்யோம த்வம் மருதஸி மருத்ஸாரதி-ரஸி
த்வ-மாபஸ்-த்வம் பூமிஸ்-த்வயி பரிணதாயாம் ந ஹி பரம் ।
த்வமேவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வ-வபுஷா
சிதானந்தாகாரம் சிவயுவதி-பாவேன பிப்ருஷே ॥

**மனநீ வெளிநீ வளிநீ கனல்நீ மறி புனல்நீ**
**நினையும் புவிநீ நினக்குவேருயொன்றும் நின்றதிலை:**
**தனது சிதானந்தப் பேருரு வத்தைச் சகவுடலாய்**
**அனை! எணி வேறுபடுதத் சிவகாந்தை ஆயினையே.**

பொருள் : அன்னையே! நீயே மனம்: நீயே ஆகாசம்; நீயே வாயு தத்வம்;நீயே அக்னி தத்வம்; நீயே பூமி தத்வம்; நீ உலகமாக மாறிய போது உன்னைக் காட்டிலும் வேறொரு பொருள் இல்லை. நீயே உன்னை, ஆனந்த பைரவன் உருவமான உலகமாக மாற்றிக் கொள்வதற்காகச் 'சிவபத்னி' என்னும் நிலையைத் தரிக்கின்றாய்.

குறிப்பு :– "எல்லாவுலகையும் மன முதல் மணஸ் ஈறாக உள்ள 6 தத்துவங்களில் அடக்கி, அவற்றைக் காரண சக்தியில் அடக்கி அதை அகண்டமாகச் செய்து அதில் 'நான்' எனும் பொருளை மூழ்கச் செய்யும் ஸமாதியில் ஈடுபடுக" என்னும் வேதப்பொருள் போதிக்கப்படுகிறது.

**நிவேதனம்** : தேன், பாயசம், சர்க்கரை

## ૩૬

# ஆக்ஞாசக்ர மஹிமை

तवाज्ञाचक्रस्थं तपन-शशि कोटि-द्युतिधरं
परं शंभुं वन्दे परिमिलित-पार्श्वं परचिता ।
यमाराध्यन् भक्त्या रवि-शशि-शुचीना-मविषये
निरालोकेऽलोके निवसति हि भालोक-भुवने ॥३६॥

தவாஜ்ஞா-சக்ரஸ்த்தம் தபன-சசி-கோடி-த்யுதிதரம்
பரம் சம்பும் வந்தே பரிமிலித-பார்ச்வம் பரசிதா ।
யமாராத்யன் பக்த்யா ரவி-சசி-சுசீனு-மவிஷயே
நிராலோகேऽலோகே நிவஸதி ஹி பாலோக-புவனே ॥

ஆதித்தன் அம்புலி அங்கி ஒளிசெயு மாற்றலிலாச்
சோதிப் புவன மடைந்துபே ரின்பச் சுவை நுகர்வான்,
ஓதுநின் ஆணைத் திகிரிக்குள் ஆலோன் ஒளி வடிவாம்
ஆதிப் பரசின் மயன் சம்பு பாதம் அடைந்தனனே.

பொருள்: உன்னுடைய ஆக்ஞா சக்ரத்தில் (இரு புருவங்களின் மத்தியில்) ஒளிர்கிறவனும், கோடி சூரியர்களின் காந்தியைத் தரிப்பவனும் ஸகுண நிர்குண சக்திகளை இருபாற் கொண்டவனும் ஆன காமேச்வரனை வணங்குகிறேன்; அப்பரசம்புவைப் பக்தியுடன் தியானிப்பவன், சூரியன், சந்திரன், அக்னி இவர்களுடைய ஒளிகள் பரவாத பரஞ்சோதிமயமான உன் ஸாயுஜ்யத்தை அடைவான்.

**நிவேதனம்:** பாயசம், வடை, அதிரசம்

## 37

# விசுத்தி சக்ர மஹிமை

विशुद्धौ ते शुद्धस्फटिक-विशदं व्योम-जनकं
शिवं सेवे देवीमपि शिवसमान-व्यवसिताम् ।
ययोः कान्त्या यान्त्याः शशिकिरण-सारूप्यसरणेः
विधूतान्त-र्ध्वान्ता विलसति चकोरीव जगती ॥३७॥

விசுத்தௌ தே சுத்தஸ்படிக-விசதம் வ்யோம-ஜனகம்
சிவம் ஸேவே தேவீமபி சிவஸமான வ்யவஸிதாம் ।
யயோ: காந்த்யா யாந்த்யா: சசிகிரண-ஸாரூப்யஸரணே:
விதூதாந்தர்-த்வாந்தா விலஸதி சகோரீவ ஜகதீ ॥

**இறைவி! விசுத்தித் தலத்திற் பளிங்கின் எழில் நிறத்தோ(டு)**
**உறையும் விசும்பருள் தேவை, நிகர்க்கு முனைப்பணிவேன்:**
**நிறையு மதியொளி போல் உம் ஒளியி னிலவருந்தித்**
**தறையும் 'சகோரம்' என மித்தை போக்கித் தழைத்திடுமே**

பொருள்: உனது 'விசுத்தி' சக்கரத்தில் (கண்டம்) சுத்தமான ஸ்படிகம் போல் ஒளிர்பவனும், ஆகாச தத்துவத்திற்குக் காரணமானவனும் ஆன பரமசிவனையும், அவனோடொத்த எண்ணமுள்ள உன்னையும் வணங்குகிறேன்; சந்திர கிரணத்தை ஒத்த உங்கள் இருவர் காந்தியினால், அஞ்ஞான இருள் நீங்கப் பெற்ற உலகம் 'சகோர பக்ஷி' போல ஆனந்தமடைகிறது.

**நிவேதனம்:** பாயசம், உளுந்துவடை, தேங்காய், பழம்

# அநாஹத சக்ர மஹிமை

समुन्मीलत्-संवित्कमल-मकरन्दैक-रसिकं
भजे हंसद्वन्द्वं किमपि महतां मानसचरम् ।
यदालापा-दष्टादश-गुणित-विद्यापरिणतिः
यदादत्ते दोषाद् गुण-मखिल-मद्भ्यः पय इव ॥३८

ஸமுன்மீலத் ஸம்வித் கமல-மகரந்தைக-ரஸிகம்
பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம் |
யதாலாபாத்-அஷ்டாதச-குணித-வித்யாபரிணதி:
யதாதத்தே தோஷாத் குண-மகில-மத்ப்ய: பய இவ ||

**உள்ளத் தடத்து மலர் ஞான சாரசத் துண்டுறைந்தே**
**விள்ளு மொழியால் அறு மூன்று விஞ்சை விரிந்திடச்செய்;**
**தெள்ளுறு குற்ற நீர் தன்னிற் குணப்பால் இனிதெடுக்கும்**
**புள்ளிணை யன்னம் தமை இதயத்தினிற் பூசிப்பனே.**

பொருள்: நான் அநாஹத சக்ரத்தில் (இதயத்தில்) சக்தியும் சிவனுமாம் இரண்டு ஹம்ஸங்களை வணங்குகிறேன்; அவை மஹான்களின் மனமாகிய தடாகத்தில் மலர்ந்த ஞானமாகிய தாமரை மலரில் ஆனந்தம் என்னும் தேனைப் பருகுபவை: அவைகள் எழுப்பும் தொனியிலிருந்து பதினெண் கலைகளும் தோன்றுகின்றன; இந்த ஹம்ஸங்கள் நீரையும் பாலையும் பிரிப்பது போல தோஷத்தையும் குணத்தையும் பிரித்தெடுத்து விடுகின்றன.

**நிவேதனம்:** பழம், கற்கண்டு, திரட்சை போன்ற ஏதாவது

# ஸ்வாதிஷ்டான சக்ர மஹிமை

तव स्वाधिष्ठाने हुतवह-मधिष्ठाय निरतं
तमीडे संवर्तं जननि महतीं तां च समयाम् ।
यदालोके लोकान् दहति महसि क्रोध-कलिते
दयार्द्रा या दृष्टिः शिशिर-मुपचारं रचयति ॥३९॥

தவ ஸ்வாதிஷ்ட்டாநே ஹுதவஹ மதிஷ்ட்டாய நிரதம்
தமீடே ஸம்வர்தம் ஜநநி மஹதீம் தாம் ச ஸமயாம் |
யதாலோகே-லோகான் தஹதி மஹஸி க்ரோத-கலிதே
தயார்த்ரா யா த்ருஷ்டி: சிசிரம் உபசாரம் ரசயதி ||

நிலையாம் இலிங்கத் தலத்திற் சிவ அனல் நீ கலந்தே
இலகிய தன்மை உளத்தால் இறைஞ்சுதும்; ஈசர்விழி
நிலவுறும் அங்கி, உலகைப் பொடி செய நின்கருணை
அலையெறி கண்நோக் கதனைப் புழைப்பித்தருள் செயுமே.

பொருள்: உன் ஸ்வாதிஷ்டான சக்கரத்தில் (குய்யம்) அக்னி தத்துவத்தை ஏற்று எப்போதும் ஒளிரும் பிரளய காலத்து அக்னி மயனான காமேச்வரனையும், 'மஹத்' என்று கூறப்படும் பராசக்தியாம் உன்னையும் ஒரு சேரத் துதிக்கின்றோம்; அப்பரமசிவன் பார்வையாம் அக்னி, உலகங்களை எரிக்கும்போது உன்கருணை பொழியும் கடாக்ஷம் அல்லவா சிதோபசாரம் செய்து உலகங்களைக் காக்கின்றது.

**நிவேதனம்:** தேன், பால், பாயசம், பொங்கல்

## 40

# மணிபூரக சக்ர மஹிமை

तटित्वन्तं शक्त्या तिमिर-परिपन्थि-स्फुरणया
स्फुर-न्नानारत्नाभरण-परिणद्धेन्द्र-धनुषम् ।
तव श्यामं मेघं कमपि मणिपूरैक-शरणं
निषेवे वर्षन्तं-हरमिहिर-तप्तं त्रिभुवनम् ॥४०॥

தடித்த்வந்தம் சக்த்யா திமிர-பரிபந்த்தி-ஸ்புரணயா
ஸ்புரந் நாநாரத்நாபரண-பரிணத்தேந்த்ர-தனுஷம் ।
தவ ச்யாமம் மேகம் கமபி மணிபூரைக-சரணம்
நிஷேவே வர்ஷந்தம் ஹரமிஹிர-தப்தம் த்ரிபுவனம் ॥

**திணியு மிருளை விழுங்கி நிலைத்த மின்தே சுடனும்,
மணிபன்னிறப்பணி இந்திர வில்லொடும் மா சிவனைப்
புணர்கதி ரால்தழல் பார், குளிர் மாரி பொழிந்தருளும்
மணிபூரகத்தமர் நீல முகிலை வணங்குவனே.**

பொருள்: தாயே! நீலமேக ரூபமான உனது ஸதாசிவ தத்துவத்தை (பராசக்திஸ்வரூபம்) மணிபூரக சக்ரத்தில் (நாபித்தலம்) நான் வணங்குகிறேன்; அம்மேகம் அங்குள்ள இருளை அகற்றும் சக்தியாகிய மின்னல்களை உடையது; பற்பல நிறமுள்ள ரத்னபரணங்களின் ஒளியாகிய வான வில்லுடன் கூடியது; காலாக்னிருத்ரனால் தகிக்கப்படும் மூவுலகையும் அமிருதவர்ஷத்தால் குளிரச் செய்வது.

**நிவேதனம்:** பால் பாயசமும், தாம்பூலமும்

41

# மூலாதார சக்ர மகிமை

तवाधारे मूले सह समयया लास्यपरया
नवात्मानं मन्ये नवरस-महाताण्डव-नटम् ।
उभाभ्या-मेताभ्या-मुदय-विधि-मुद्दिश्य दयया
सनाथाभ्यां जज्ञे जनकजननीमत् जगदिदम् ।४१॥

தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்ய-பரயா
நவாதமானம் மந்யே-நவரஸ-மஹாதாண்டவ-நடம் ।
உபாப்யா-மேதாப்யாம்-உதய-விதி-முத்திச்ய தயயா
ஸநாதாப்யாம் ஜஜ்ஞே ஜனகஜனனீமத் ஜகதிதம் ॥

**மூலத் திகிரி நிருத்தம் புரியு முதல்வியுடன்**
**சால ஆனந்த நடனம் புரிசிவற்ருழ் குவனே;**
**ஞாலம் படைக்க இவர்தம் புணர்ச்சி நடைவழியே**
**சீல மிகும் அன்னை தந்தை திறனைத் தெளிந்தனமே.**

*பொருள்: தாயே! உன் மூலாதாரம் என்ற சக்கரத்தில் (குதத்துக்கும் இலிங்கத்துக்கும் நடு) நடனம் புரிபவளான 'சமயா' தேவியுடன் ஆனந்தத் தாண்டவம் என்னும் நடனம் புரிகின்ற 'மஹாபைரவர்' என்ற உன் ரூபத்தை வணங்குவேன்; பிரளயத்துக்குப் பிறகு மறுபடியும் தோன்றும் இவ்வுலகிற்கு மஹாபைரவர், மஹாபைரவி என்ற நீங்கள் இருவரும் கருணையால் ஒன்று கூடித் தாய் தந்தையர்கள் ஆகிறீர்கள்.*

**நிவேதனம்:** பொங்கல், தேன்

# ஸௌந்தர்ய லஹரீ

## இரண்டாம் பாகம் — ஸௌந்தர்யலஹரீ

## தேவியின் கிரீடச் சிறப்பு

गतै-र्माणिक्यत्वं गगनमणिभिः सान्द्रघटितं
किरीटं ते हैमं हिमगिरिसुते कीर्तयति यः ।
स नीडेयच्छाया-च्छुरण-शबलं चन्द्र-शकलं
धनुः शौनासीरं किमिति न निबध्नाति धिषणाम् ॥

கதைர்-மாணிக்யத்வம் ககனமணிபி: ஸாந்த்ரகடிதம்
கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே! கீர்த்தயதி ய: ।
ஸ நீடேயச்சாயாச்-சுரண சபலம் சந்த்ர-சகலம்
தனு: சௌனாஸீரம் கிமிதி ந நிபத்னாதி திஷணாம் ॥

**அந்தரஞ் சேருந் தபனர் மணி வடிவா முடிமேல்
இந்து, நவமணிப் பன்னிற மெய்தி இலகுவதால்
சந்திரன் நற்கலை அன்றென்பர் கண்டோர்; தனியழகார்
இந்திரன் நற்சிலை ஈதென்பர்; யாதென்றியம்புவனே.**

பொருள்: தாயே! பன்னிரு சூர்யர்களாகிய ரத்தினங்கள் இழைத்த உனது கிரீடத்தைக் கண்டு வருணிப்பவர், உனது கிரீடத்தின் ஸந்திகளில் இழைக்கப் பட்ட நவமணிகளின் காந்திகள் பரவியுள்ள சந்திர கலையைப் பார்த்து இது வானவில் என்று கூற முற்படுவர்.

**நிவேதனம்:** *பாலும் சர்க்கரையும்*

# தேவியின் கேச வர்ணனை

धुनोतु ध्वान्तं न-स्तुलित-दलितेन्दीवर-वनं
घन-स्निग्ध-श्लक्ष्णं चिकुर-निकुरुम्बं तव शिवे ।
यदीयं सौरभ्यं सहसमुपलब्धुं सुमनसो
वसन्त्यस्मिन् मन्ये वलमथन-वाटी विटपिनाम् ॥४३॥

துனோது த்வாந்தம் நஸ்-துலித-தலிதேந்தீவர-வநம்
கன-ஸ்நிக்த-ச்லக்ஷ்ணம் சிகுர-நிகுரும்பம் தவ சிவே ।
யதீயம் ஸௌரப்யம் ஸஹஜ-முபலப்தும் ஸுமநஸோ
வஸந்த்யஸ்மின் மந்யே வலமதன-வாடீ-விடபிநாம் ॥

**அலர் தரு நெய்தலங்காடு நிகர்த்து நெய்த் தன்னே!**
**இருண்[டு]**
**இலகும் செறிவோ[டு] இயற்கை மணத்தை இதழ் பெறவே**
**துலங்கிடு கற்ப தரு மலர் வேண்டித் துதைந்தமரும்**
**சிலம்பளி காரோதி உன்னிருள் ஓட்டுக செந்திருவே.**

பொருள்: செந்திருவே! உன்னுடைய கேசங்கள் மலர்ந்த கரு நெய்தல் புஷ்பங்கள் போல நெருக்கமாகவும் வழவழப்பாகவும் உள்ளன; இந்த கேசங்கள் எங்களின் அஞ்ஞான இருளை அகற்றுவதாகுக! உன் கேசங்களில் இயற்கையாக அமைந்த வாசனையை அடைவதற்காகவே இந்திரன் தோட்டத்தில் உள்ள கற்பகத்தருவின் மலர்கள் உனது கேசங்களில் வாசம் புரிகின்றன.

**நிவேதனம்:** ம்ருஷ்டான்னம்

# தேவியின் வகிட்டின் வருணனை

तनोतु क्षेमं न-स्तव वदनसौन्दर्यलहरी-
परीवाहस्रोतः सरणिरिव सीमन्तसरणिः ।
वहन्ती सिन्दूरं प्रबल कबरी-भार-तिमिर-
द्विषां बृन्दै-र्बन्दीकृतमिव नवीनार्क-किरणम् ॥४४॥

தநோது க்ஷேமம் நஸ்-தவ வதன-ஸௌந்தர்யலஹரீ
பரீவாஹஸ்ரோத: ஸரணிரிவ ஸீமந்த-ஸரணி: ।
வஹந்தீ ஸிந்தூரம் ப்ரபலகபரீ-பார-திமிர-
த்விஷாம் ப்ருந்தைர்-பந்தீக்ருதமிவ நவீநார்க-கிரணம்॥

**மானே! முகத்தின் அழகலை ஏறி வழிந்தவற்றைத்**
**தானே விடுங்கவர் காலோ? இருளோதி சார்பகையால்**
**வானேய் இளங்கதிர் நாப்பண் மறுகிட வைத்ததுவோ**
**ஆனத சிந்துரச் சீமந்தம் யோகம் அருளுகவே**

பொருள்: உன் கேசங்களுக்கு இடையே உள்ள வகிடு (ஸீமந்தம்) உன் முக சௌந்தர்யம் வழிந்தோடும் வழி போல் உள்ளது; உனது கேசங்களாகிய இருள் வடிவான பலமுள்ள பகைவர் கூடி உதயசூரியனை (குங்குமம்) நடுவில் சிக்கவைத்துவிட்டனரோ எனத்தோன்றும் வண்ணம் இளஞ் சூரியன் போன்ற குங்குமம் அப்பிய அந்த வகிடு எங்களுக்கு க்ஷேமத்தை அளிக்கட்டும்.

**நிவேதனம்:** தேன்

# தேவியின் முன்நெற்றி மயிர்கள்

अरालैः स्वाभाव्या-दलिकलभ-सश्रीभि-रलकैः
परीतं ते वक्त्रं परिहसति पङ्केरुह-रुचिम् ।
दरस्मेरे यस्मिन् दशनरुचि-किञ्जल्क-रुचिरे
सुगन्धौ माद्यन्ति स्मरदहन-चक्षु-र्मधुलिहः ॥४५॥

அராலை: ஸ்வாபாவ்யாத்-அலிகலப-ஸச்ரீபி-ரலகை:
பரீதம் தே வக்த்ரம் பரிஹஸதி பங்கேருஹ-ருசிம் ।
தரஸ்மேரே யஸ்மின் தசனருசி-கிஞ்ஜல்க-ருசிரே
ஸுகந்தௌ மாத்யந்தி ஸ்மரதஹன-சக்ஷுர் மதுலிஹ: ||

**கூரெயி ருகும் அகவிதழ் கூடிக் குறுமுறுவல்**
**ஆரும் இயற்கை மணம்பூண் டரனுர் விழியளிகள்**
**தேர்உன் வதனம், அளகமதுகரஞ்சேர்ந்தமைந்து**
**நாரச் செயற்கை மணக்கமலத்தை நகைத்திடுமே.**

பொருள் : உன் முகமாகிய தாமரை மலர், சற்று மலர்ந்தது போல் புன்முறுவலுடன் கூடியுள்ளது; உனது பற்களாகிய அக இதழ்கள் அதற்கு உள்ளன; மலரின் இயற்கை மணமும் உன் முகத்துக்குள்ளது; உன் திருமுகத் தாமரை மலரைப் பரமசிவன் கண்களாகிய வண்டுகள் வட்டமிட்டு மகிழும்; அந்த நெற்றியைச் சுற்றிலும் சிறு வண்டுகள் போன்ற முன்நெற்றி மயிர்கள் பரவியுள்ளன. இத்தகைய உன் முகம் தாமரை மலரைப் பரிகசிக்கின்றது.

(அளகம் = முன்நெற்றி மயிர். நாரம்—நீர்)

**நிவேதனம் :** த்ரிமதுரம்

# தேவியின் நெற்றி

ललाटं लावण्य-द्युति-विमल-माभाति-तव यत्
द्वितीयं तन्मन्ये मकुटघटितं चन्द्रशकलम् ।
विपर्यास-न्यासा-दुभयमपि संभूय च मिथः
सुधालेपस्यूतिः परिणमति राका-हिमकरः ॥४६॥

லலாடம் லாவண்ய–த்யுதி-விமல-மாபாதி தவ யத்
த்விதீயம் தன்மந்யே மகுடகடிதம் சந்த்ரசகலம் |
விபர்யாஸ-ந்யாஸா-துபயமபி ஸம்பூய ச மித:
ஸுதாலேபஸ்யூதி: பரிணமதி ராகா-ஹிமகர: ||

செப்புந் திருநுதல் பேரழகாந் சந்திரிகை சொரிந்
தொப்பில் மணிமுடி தொங்கும் பிறையாய் உளங்கவரும்;
கொப்பணி நங்காய்! முடியின் பிறை மதி, கூடுநுதல்
திப்பிய வெண்மதி மாறிநிறை மதிச் சீர்தருமே.

பொருள் : உன்னுடைய நெற்றி, அழகாம் சந்திரிகை பரப்பி, உன் கிரீடத்தில் கீழ்நோக்கித் தொங்கவிடப்பட்ட மற்றொரு சந்திரகலை போல் காட்சி தரும்; ஏற்கனவே மேல் நோக்கிக் கிரீடத்திலுள்ள சந்திர கலையையும் மாற்றி வைத்தால் இரண்டும் சேர்ந்து பூர்ண சந்திரனாகக் காட்சி தரும்.

நிவேதனம் : பால் பாயசமும், தேனும்

# தேவியின் புருவங்கள்

भ्रुवौ भुग्ने किंचिद्भुवन भय-भङ्ग-व्यसनिनि
त्वदीये नेत्राभ्यां मधुकर-रुचिभ्यां धृतगुणम् ।
धनु-र्मन्ये सव्येतरकर-गृहीतं रतिपतेः
प्रकोष्ठे मुष्टौ च स्थगयति निगूढान्तर-मुमे ॥४७॥

ப்ருவெள புக்னே கிஞ்சித்புவன-பய-பங்க-வ்யுஸநிநி
த்வதீயே நேத்ராப்யாம் மதுகர-ருசிப்யாம் த்ருத-குணம் ।
தநுர்-மந்யே ஸவ்யேதரகர-க்ருஹீதம் ரதிபதே:
ப்ரகோஷ்டே முஷ்டெள ச ஸ்தகயதி நிகூடாந்தரமுமே॥

**கருவிழி வண்டெனு நாணினை ஏற்றி அக்காமன் இடக்**
**கரமதிற் கொண்ட புருவவில், கையால் கதிர்விரலால்**
**உருவ மறைக்க மறைந்த திடைவெளி; உன்னிடுங்கால்**
**திருமகள் போற்றும் உமையே! அநங்கன் சிலைபிதுவே.**

பொருள் : உமையே! சற்று வளைந்த உன் புருவங்களை மன்மதனின் வில் என்று நினைக்கிறேன். இந்த வில், வண்டுகள் போல் உள்ள உன் இரண்டு கண்களாகிய நாண் கயிற்றுடன் கூடியது; இதை மன்மதன் இடது கையில் வைத்துக் கொண்டிருப்பதால் முழங்கையிலிருந்து மணிக்கட்டுவரை கையும், விரல்களின் சந்தியும் இந்த வில்லின் நடுப்பகுதியை மறைக்கிறது என்று எண்ணுகிறேன்.

**நிவேதனம் :** பழம், தேங்காய், தேன்

# தேவியின் கண்கள்

अहः सूते सव्यं तव नयन-मर्कात्मकतया
त्रियामां वामं ते सृजति रजनीनायकतया ।
तृतीया ते दृष्टि-र्दरदलित-हेमाम्बुज-रुचिः
समाधत्ते सन्ध्यां दिवस-निशयो-रन्तरचरीम् ॥४८॥

அஹ: ஸூதே ஸவ்யம் தவ நயன-மர்க்காத்மகதயா
த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜநீ நாயகதயா |
த்ருதீயா தே த்ருஷ்டிர்-தரதலித-ஹேமாம்புஜ-ருசி:
ஸமாதத்தே ஸந்த்யாம் திவஸ-நிசயோ-ரந்தரசரீம் ||

**பானு வலப்பால் மலர்க்கண் பகலைப் படைத்திடுமால்;**
**ஆன இடப்பால் சசிக்கண் இரவையுண்டாக்கிடுமால்;**
**கானப் பிறப்பே! அலர்ந்தபொற்றாமரைக் காந்தியுடன்**
**மான நுதற்கண் விளைத்திடும் அக்காலை மாலையையே.**

பொருள் : தாயே! உன் வலக்கண் சூரியனாக இருப்பதால் பகலைத் தோற்றுவிக்கும்; உன் இடக்கண் சந்திரனாக இருப்பதால் இரவைப் படைக்கும்; உன் மூன்றாவது கண் சற்று மலர்ந்த பொற்றாமரை மலர் போல் இருப்பதால் இரவு பகல்களின் இடையே உள்ள காலை மாலை ஸந்தியா காலங்களை அமைக்கிறது.

குறிப்பு :— காலத்தையே தன் திருஷ்டியால் படைக்கும் ஆற்றல் உடையவள் பராசக்தி.

**நிவேதனம் :** தேன், பழம், சித்திரான்னம்

# தேவியின் பார்வை

विशाला कल्याणी स्फुटरुचि-रयोध्या कुवलयैः
कृपाधाराधारा किमपि मधुराऽऽभोगवतिका ।
अवन्ती दृष्टिस्ते बहुनगर-विस्तार-विजया
ध्रुवं तत्तन्नाम-व्यवहरण-योग्या विजयते ॥४९॥

விசாலா கல்யாணீ ஸ்புடருசி-ரயோத்யா குவலயை:
க்ருபாதாராதாரா கிமபி மதுராSSபோக-வதிகா |
அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹு நகர விஸ்தார-விஜயா
த்ருவம் தத்தந்நாம-வ்யவஹரண-யோக்யா விஜயதே ||

**கோல விசாலைகல் யாணி அயோத்தி குவலயத்தால்;**
**சால உளங்கவர் போகவதி தாரை தண்ணமுதில்;**
**வாலை! அளியால் அவந்தி விசயை மதுரை என்றே**
**நீல விழி, நகர்ப்பேர் கவர்ந்தாளும் நிலவுலகே.**

பொருள்: உன் கண் விசாலமானது; மங்களகரமானது: கருநெய்தல் பூக்களால் யுத்தம் செய்ய முடியாதது பாம்பின் படம் போல் அகன்றும் நீண்டும் இருப்பது; அமுது பொழிவது; கருணை சொரிவது; வெற்றி கொண்டது. மதுரம் ஊட்டுவது: பல தலைநகரங்கள் போல் ஒளிர்வது; இவ்வாறு இருப்பதால் விசாலா, கல்யாணி, அயோத்யா, போகவதி, தாரா, அவந்தி, விஜயா, மதுரா முதலிய பெயர்களால் அழைக்கத் தக்கதாய் விளங்குகிறது.

**நிவேதனம்:** பொங்கலும், தேனும்

50

# தேவியின் கடைக்கண் நோக்கு



कवीनां सन्दर्भ स्तबक-मकरन्दैक-रसिकं
कटाक्ष-व्याक्षेप-भ्रमरकलभौ-कर्णयुगलम् ।
अमुञ्चन्तौ-दृष्ट्वा तव नवरसास्वाद-तरलौ
असूया-संसर्गा-दलिकनयनं किञ्चिदरुणम् ॥५०॥

கவீனும் ஸந்தர்ப்ப–ஸ்தபக–மகரந்தைக–ரஸிகம்
கடாக்ஷ–வ்யாக்ஷேப–ப்ரமர–கலபௌ கர்ணயுகளம் |
அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவரஸாஸ்வாத-
தரலௌ
அஸூயா–ஸம்ஸர்க்காத் அலிகநயநம் கிஞ்சிதருணம் ||

**படைக்குங் கவிஞர்தங் காவியக் கொத்திற் படி நறவைக்**
**குடிக்கும் இருசெவி விட்டகலாது குடியிருந்து**
**வடிக்கும் நவரசம் உண்டு பிறழ்விழி வண்டிணைகண்**
**டடுக்கும் நுதற்கண் பொருது சிவந்திடும் ஆரணங்கே.**

பொருள்: தாயே! உன் இரண்டு செவிகளும், கவிஞரின் காவியப் படைப்பாம் புஷ்பக் கொத்திலுள்ள தேனைப் பருகும் ஆவல் கொண்டவை; அக்காதுகளைச் சற்றும் பிரியாமல் உள்ள உன் கண்களும் அக்காதளவோடிக் காவியச் சுவையைக் காதுடன் போட்டியிட்டுப் பருகும் காட்சி கண்ட நெற்றிக்கண் பொறாமையால் கொஞ்சம் சிவப்பாகமாறும்.

**நிவேதனம்:** கரும்பும், சர்க்கரையும்

51

# தேவியின் திருஷ்டி மகிமை

शिवे शृङ्गारार्द्रा तदितरजने कुत्सनपरा
सरोषा गङ्गायां गिरिशनयने विस्मयवती ।
हराहिभ्यो भीता सरसिरुह-सौभाग्य-जननी
सखीषु स्मेरा ते मयि जननि दृष्टिः सकरुणा ॥५१॥

சிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜநே குத்ஸநபரா
ஸரோஷா கங்காயாம் கிரிசநயநே விஸ்மயவதீ ।
ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹ–ஸௌபாக்யஜநநீ
ஸகீஷு ஸ்மேரா தே மயி ஜநநி த்ருஷ்டி: ஸகருணா ॥

**அரன்பால் உவகை அலார்பால் இளிவரல் ஆடரவைக்**
**கருதுதொ றச்சம் முடிநதிபாற் சினம் கண் அழல்பால்**
**இரத மருட்கை மலர்பாற் பெருமிதம் எற்கருளே**
**அருகமர் பாங்கியர் பால் நகை காட்டும் அலர் விழியே.**

பொருள் : தாயே! உன் பார்வையில் எண்வகை ரசங்களும் பொதிந்துள்ளன. 'சதாசிவன்' விஷயத்தில் சிருங்கார ரசமும், மற்ற மக்களிடம் அருவருப்பும், சிவபிரானின் பாம்புகளிடம் பயமும், கங்கையிடம் கோபமும், நெற்றிக் கண்ணில் அற்புத ரசமும் தாமரை மலர் போல் சிவந்து வீர ரஸ்மும் என்னிடம் கருணை ரசமும், தோழிகளிடம் ஹாஸ்ய ரசமும் கொண்டதாய் விளங்கும்.

**நிவேதனம் :** உளுந்துவடை, தேன்

## 52

# தேவியின் கண்கள்

गते कर्णाभ्यर्णं गरुत इव पक्ष्माणि दधती
पुरां भेत्तुश्चित्तप्रशम-रस-विद्रावण-फले ।
इमे नेत्रे गोत्राधरपति-कुलोत्तंस-कलिके
तवाकर्णाकृष्ट-स्मरशर-विलासं कलयतः ॥५२॥

கதே கர்ணாப்யர்ணம் கருத இவ பக்ஷ்மாணி தததீ
புராம் பேத்துஸ்—சித்தப்ரசம—ரஸ—வித்ராவண—பலே ।
இமே நேத்ரே கோத்ராதரபதி—குலோத்தம்ஸ—கலிகே
தவாகர்ணக்ருஷ்ட-ஸ்மரசர-விலாஸம் கலயத: ॥

**காதார் குழையைப் பொருதம் [பு] இறகெனுங்**
**கண்ணிமைகொள்**
**போதார் திருவிழி, நித்தர்தம் சாந்தியைப் போக்கி உயிர்க்**
**காதார நாதற் குவகைச் சுவையை அளித்திடலால்**
**ஆதி யிடங்கொளு நாயகி! அங்கசன் அம்பதுவே.**

பொருள்: உன் இரண்டு கண்கள் காதுகள் வரை பரவியுள்ளன. பாணங்களுக்கு இருபுறமும் கட்டப்படும் இறகுகள் போன்ற இமை மயிர்களையும் தாங்குகின்றன. இவை பரமசிவனின் சாந்தி ரஸத்தை அழிப்பவை; சிருங்காரத்தைத் தோற்றுவிப்பவை எனவே அவை மன்மத பாணங்களே.

**நிவேதனம்:** பாயசமும், எள்ளோரையும்

# முக்கண்களும் முக்குணங்களும்

विभक्त-त्रैवर्ण्यं व्यतिकरित-लीलाञ्जनतया
विभाति त्वन्नेत्र-त्रितय-मिद-मीशान-दयिते ।
पुनः स्रष्टुं देवान् द्रुहिण-हरि-रुद्रानुपरतान्
रजः सत्वं बिभ्रत् तम इति गुणानां त्रयमिव ॥५३॥

விபக்த-த்ரைவர்ண்யம் வ்யதிகரித-லீலாஞ்ஜனதயா
விபாதி த்வந்நேத்ர-த்ரிதய-மிதம் ஈசானதயிதே ।
புன: ஸ்ரஷ்டும் தேவான் த்ருஹிண ஹரி ருத்ரானுபரதான்
ரஜ: ஸத்வம் பிப்ரத் தம இதி குணனும் த்ரயமிவ ॥

**கருதிடுஞ் செம்மை விளர்ப்பு, மையிட்ட கருமை கொளும்**
**வரி விழி மூன்றும் அக் கற்பகாலத்தினில் வந்தொடுங்கும்**
**பிரமன் அரி அரன் மூவர் படைப்புப் பெருங்கருவாய்**
**வருகுண மூன்றும் தரிக்கும்; நினதருள் வண்மையிதே.**

பொருள் : தாயே! நீ கண்களில் மையைத் தீட்டியிருக்கிருய்; எனவே உன் மூன்று கண்களும் சிவப்பு, வெளுப்பு கருப்பு என்னும் மூன்று நிறங்களைக் கொண்டிருக்கின்றன; இதைப்பார்த்தால், பிரளய காலத்தில் உன்னில் அடங்குகிற பிரமன் திருமால் ருத்திரன் என்னும் தேவர்களை மறுபடியும் படைப்பதற்காக முறையே ரஜோகுணம், ஸத்வகுணம், தமோகுணம் என்பவற்றை உன் கண்கள் தாங்குகின்றன என்று எண்ணுகிறேன்.

**நிவேதனம்:** பால் பாயசம்,

# முக்கண்களும் மூன்று நதிகளும்

पवित्रीकर्तुं नः पशुपति-पराधीन-हृदये
दयामित्रै-र्नेत्रै-ररुण-धवल-श्याम-रुचिभिः ।
नदः शोणो गङ्गा तपनतनयेति ध्रुवममुं
त्रयाणां तीर्थाना-मुपनयसि संभेद-मनघम् ॥५४॥

பவித்ரீ-கர்த்தும் ந: பசுபதி-பராதீன-ஹ்ருதயே
தயாமித்ரைர்-நேத்ரை: அருண-தவல-ச்யாம ருசிபி: ।
நத: சோணோ கங்கா தபன-தனயேதி த்ருவமமும்
த்ரயாணாம் தீர்த்தானா-முபநயஸி ஸம்பேத-மநகம் ॥

தங்கும் அருட்கடல்! முந்நிற ரேகை தவழ்விழியாம்
துங்கநற் சோணை வெண் கங்கை யமுனை துலங்கிவற்றின்
சங்கமத் தெங்களைத் தூய்மைப் படுத்திடத் தான் கருதிச்
சங்கலை செங்கை உடையாய்! படைக்குஞ் சதுரநன்றே.

பொருள் : தாயே! உன் கண்களில் சிவப்பு, வெளுப்பு, கருப்பு என்னும் மூன்றுவித ரேகைகள் வெவ்வேறு வழியாக செல்கின்றன; அவைகள், சிவப்பு நிறமுள்ள சோணை நதி, வெளுப்பான கங்கை, கரு நிறமுள்ள யமுனை இவற்றின் சங்கமத்தை எங்களைப் புனிதம் செய்வதற்காக அமைத்திருகிருய் என்று எண்ணத் தோன்றும்.

**நிவேதனம் :** வெல்லப் பாயசம்

# 55

# தேவியின் இமையா நாட்டம்

निमेषोन्मेषाभ्यां प्रलयमुदयं याति जगती
तवेत्याहुः सन्तो धरणिधर-राजन्यतनये ।
त्वदुन्मेषाज्जातं जगदिद-मशेषं प्रलयतः
परित्रातुं शङ्के परिहृत-निमेषा-स्तव दृशः ॥५५॥

நிமேஷோன்-மேஷாப்யாம் ப்ரலய-முதயம் யாதி ஜகதீ
தவேத்யாஹு: ஸந்தோ தரணிதர-ராஜன்யதனயே! ।
த்வதுன்மேஷாஜ்ஜாதம் ஜகதித-மசேஷம் ப்ரலயத:
பரித்ராதும் சங்கே பரிஹ்ருத-நிமேஷாஸ்-தவ த்ருச: ||

**உலகம் நினதுகண் மூடின் அழியும்; உவந்து திறந்
துலவின் உதயம் உறும் என ஆன்ஞேர் உரைத்திடுவர்;
நிலவும் விழிகள் திறந்து படைத்த நிலவலயம்
நிலையாய்ப் பொலிய இமையா விழியுடன் நின்றனையே.**

பொருள் : நீ கண்களை மூடித் திறப்பதால் உலகம் அழிந்து மறுபடியும் தோன்றுகிறது என அறிஞர் கூறுவர்; எனவே உன் கண்ணைத் திறந்ததால் தோன்றிய இவ்வுலகனைத்தும் அழியாமல் காப்பதற்காகவே, உன் கண்கள் இமைகொட்டாமல் இருக்கின்றன என்று எண்ணுகிறேன்.

குறிப்பு :— தேவதைகளுக்கு இமைகொட்டுதல் இல்லை என்பது மரபு.

**நிவேதனம் :** பாயசம், தேங்காய், வெற்றிலைப் பாக்கு

# தேவிகண்களின் ஸௌபாக்யம்

तवापर्णे कर्णे-जप-नयन-पैशुन्य-चकिता
निलीयन्ते तोये नियत-मनिमेषाः शफरिकाः ।
इयं च श्री-र्बद्धच्छद-पुट-कवाटं कुवलयं
जहाति प्रत्यूषे निशि च विघटय्य प्रविशति ।।५६।।

தவாபர்ணே கர்ணேஜப நயந—பைசுன்ய—சகிதா
நிலீயந்தே தோயே நியத மநிமேஷா: சபரிகா: ।
இயஞ் ச ஸ்ரீர்—பத்தச்சத—புடகவாடம் குவலயம்
ஜஹாதி ப்ரத்யூஷே நிசி ச விகடய்ய ப்ரவிசதி ।।

**இருகுழைக் காதி னருகே விழிசொல்வதேதெனவே**
**வருநீர்க் கயல்மீன் பயந்திமை யாது மறைந்திடுமால்**
**பரவும் விழித்திரு கங்குலில் நெய்தற் பவன முற்று**
**விரவிய வைகறைப் போதினில் அமமலர் விட்டிடுமே.**

பொருள்: உன் கண்கள் உன் காதுகளின் அருகில் சென்று கோள் சொல்கிறதோ என்ற பயத்தால் உன்னைப் போல் இமைகொட்டாத மீன்கள் தண்ணீரில் மறைந்து விடுகின்றன. உன் கண்களின் 'சோபை' ஆகிற லட்சுமி, இரவில் கரு நெய்தல் மலரின் இதழ்களைத் திறந்து உள்புக்கு விடியற்காலையில் இதழ்குவியும் கரு நெய்தல் மலரை விட்டு அகல்கிறாள். (கரு நெய்தல் மலர் இரவில் மட்டும் மலர்ந்து தேவி கண்ணின் சோபையைப் பெறும்).

**நிவேதனம்: தேன்**

57

# தேவியின் கடைக்கண் பெருமை

**दृशा द्राघीयस्या दरदलित-नीलोत्पल-रुचा**
**दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।**
**अनेनायं धन्यो भवति न च ते हानि-रियता**
**वने वा हर्म्ये वा समकर-निपातो हिमकरः ।।५७।।**

த்ருசா த்ராகீயஸ்யா தரதலித நீலோத்பல–ருசா
தவீயாம்ஸம் தீனம் ஸ்நபய க்ருபயா மாமபி சிவே |
அநேனுயம் தன்யோ பவதி ந ச தே ஹானி–ரியதா
வநே வா ஹர்ம்யே வா ஸமகர–நிபாதோ ஹிமகர : ||

**சிறிதே அலர்ந்த நீல நிகர்த்துச் செவியளவோ**
**டரிவிழி நோக்கால் நெடுந்தொலை நின்றே அயர்ந்திரக்கும்**
**வறியவனேனை நீராட்டிடுவாய் சிவை! வாழ்வடைவேன்**
**நிறைமதி வீட்டுளுங் காட்டுளும் காந்தி நிரப்பிடுமே.**

*பொருள் : சகல மங்களங்களையும் அளிப்பவளே! உன் கடைக்கண் பார்வை சிறிது மலர்ந்த கரு நெய்தல் புஷ்பம் போல் விளங்குகிறது; காது வரை நீண்டுள்ளது: உன்னை நெருங்காது நெடுந்தொலைவில் நின்ற இந்த ஏழையை அந்த பார்வையால் நீராட்டிவைப்பாய்; அதனுல் நான் புண்யசாலி ஆவேன்: இதனுல் உனக்கு எந்தக் குறையுமில்லை சந்திரன் காட்டிலும் அரண்மனையிலும் பாரபக்ஷமின்றி ஒரேவிதமாக தானே நிலவு சொரிகின்றுன்.*

**நிவேதனம் :** தேனும், பாயசமும்

# இரண்டு பாளீகளின் வருணனை

अरालं ते पालीयुगल-मगराजन्यतनये
न केषा माधत्ते कुसुमशर-कोदण्ड-कुतुकम् ।
तिरश्चीनो यत्र श्रवणपथ-मुल्लङ्घ्य विलसन्
अपांग-व्यासंगो दिशति शरसन्धान-धिषणाम् ॥५८॥

அராலம் தே பாலீயுகல—மகராஜன்யதனயே!
ந கேஷா—மாதத்தே குஸுமசர—கோதண்ட குதுகம் |
திரஸ்சீனோ யத்ர ச்ரவணபத—முல்லங்க்ய விலஸன்
அபாங்க—வ்யாஸங்கோ—திசதி சரஸந்தான—திஷணும் ||

**உலகனை! காது விழிஇதன் நாப்பண் உறும், வளைவா**
**யிலகிடும் பாளியுகளம் அனங்கன் எழில் தனுவே:**
**உலவுங் கடைவிழிப் பார்வை செவிவழி ஓடுதலின்**
**மலர் மதன் அம்பு தொடுத்தனன் என்று வழுத்துவனே.**

பொருள்: காதுகளுக்கும், கண்களுக்கும் நடுவில் வளைவாய்க் காணப்படும் பிரதேசம் (பாளீ) மன்மத வில் என்று யாருக்குத் தோன்றாது? ஏனெனில் இப்பிரதேசத்தின் நடுவில் உன் கடாக்ஷம் குறுக்காகச் செல்லும் போது சம்பந்தப்படுவதாலும் காதுகளைத் தாண்டிப் பிரகாசிப்பதாலும் மன்மதன் வில்லில் பாணம் தொடுக்கிறானே என்ற ஐயத்தை உண்டுபண்ணுகிறது.

**நிவேதனம்:** தேனும், சித்ரான்னமும்

59

# தேவியின் திருமுகம்

स्फुरद्गण्डाभोग-प्रतिफलित-ताटङ्कयुगलं
चतुश्चक्रं मन्ये तव मुखमिदं मन्मथरथम् ।
यमारुह्य द्रुह्य-त्यवनिरथ-मर्केन्दुचरणं
महावीरो मारः प्रमथपतये सज्जितवते ॥५९॥

ஸ்புரத்கண்டாபோக–ப்ரதிபலித–தாடங்க–யுகளம்
சதுஸ்சக்ரம் மன்யே தவமுகமிதம் மன்மதரதம் |
யமாருஹ்ய த்ருஹ்யத்யவனிரத மர்க்கேந்து–சரணம்
மஹாவீரோ மார: ப்ரமதபதயே ஸஜ்ஜிதவதே ||

**ஏர்கொண்ட ஆடிக்கபோலத் தொளிசெய்இணைக்குழையாஞ்**
**சீர் கொண்ட சக்கரம் நான்கார் உன் சோதித் திருவதனத்**
**தேர்கொண்டு செல்காமன், ஆழிஇரு சுடர்த் தேரெனவே**
**பார் கொண்டு சென்றவன் தோற்றிடத் தீர்ந்தான்**
**பழம்பகையே.**

பொருள் : உன் 'தாடங்கங்கள்' என்ற ஸ்ரீ சக்ர ரூப மான இரண்டு காதணிகள் கண்ணாடி போன்ற கன்னத்தில் பிரதிபலித்து மேலும் இரண்டு காதணிகள் உள்ளன போலத் தோன்றும். அவ்வாறு தோன்றும் உன் திருமுகத்தை நான்கு சக்கரங்களுடன் கூடிய மன்மதனின் ரதம் எனக் கருதுகிறேன். இந்த ரதத்தில் ஏறிக் கொண்டு தான் மன்மதன், சூரியனையும் சந்திரனையும் சக்கரங்களாகக் கொண்ட பூமியாகிய இரதத்தில் ஏறிப் போர் தொடுக்கும் பரமசிவனை வென்று பழம்பகை தீர்ந்தான்.

**நிவேதனம் :** வெண்பொங்கலும் தேனும்

# தேவியின் இனிய பேச்சு

सरस्वत्याः सूक्ती-रमृतलहरी कौशलहरीः
पिबन्त्याः शर्वाणि श्रवण-चुलुकाभ्या मविरलम् ।
चमत्कार-श्लाघाचलित-शिरसः कुण्डलगणो
झणत्कारैस्तारैः प्रतिवचन-माचष्ट इव ते ॥ ६०॥

ஸரஸ்வத்யா: ஸூக்தீ–ரம்ருத–லஹரீ கௌசலஹரீ:
பிபந்த்யா: சர்வாணி! ச்ரவண–சுலுகாப்யா–மவிரலம் |
சமத்கார–ச்லாகாசலித சிரஸ: குண்டலகணோ
ஜணத்காரைஸ்–தாரை: ப்ரதிவசன–மாசஷ்ட இவ தே ||

நாடும் அமுதச் சுவைதோற்கு நின்சொல் நலமனைத்தும்
கூடுஞ் செவியாற் பருகிக்கலை மகள் கூர்களிப்பின
ஆடும் அலங்கல் முடியைத் துளக்க, அனவரதம்
ஈடில் மணிக்குண்டல ஒலி மாற்ற மியம்பிடுமே

பொருள்: அமிர்த தாரையின் சுவையையும் வெற்றி கொண்ட உன் சொல்லினிமையைச் சரஸ்வதி தேவி இடைவிடாமல் காதுகளால் பருகித் தலையசைத்து மகிழ்கிறாள்; அவள் தலையசைக்கும்போது ஒலிக்கும் அவளது கர்ண குண்டலங்கள், ஆமோதிக்கும் வார்த்தைகளைச் சொல்பவை போல் இருக்கின்றன.

**நிவேதனம்:** பால் பாயசம், தேன்

# தேவியின் நாசி

**असौ नासावंश-स्तुहिनगिरिवंश-ध्वजपटि**
**त्वदीयो नेदीयः फलतु फल मस्माकमुचितम् ।**
**वहत्यन्तर्मुक्ताः शिशिर-कर-निश्वास-गलितं**
**समृद्धया यस्तासां बहिरपि च मुक्तामणिधरः ॥६१॥**

அஸௌ நாஸாவம்ச—ஸ்துஹிநகிரிவம்ச—த்வஜபடி!
த்வதீயோ நேதீய: பலது பல—மஸ்மாக—முசிதம் |
வஹத்யந்தர்—முக்தா: சிசிரகர—நிச்வாஸ—கலிதம்
ஸம்ருத்த்யா யஸ்தாஸாம் பஹிரபி ச முக்தாமணிதர: ||

**உள்ளக்கமலத் துறைபவளே! மூங்கிற்கொப்பெனலாய்**
**உள்ளே ஒளிர் நித்தில மொன்று, நாடி உயிர்ப்பதனல்**
**மெள்ள நழுவி வெளி வந்ததோ எனும் வெள்ளை முத்துக்**
**கொள்ளும் குமிழ்நாசி ஒல்லை பெரும்பயன் கூட்டுகவே.**

பொருள்: சிற்சக்தியே! உன் நாசியாகிய மூங்கில், தன்னுள் முத்துக்களைத் தாங்குகிறது. ஆகவே உன் இடது நாசியாகிய சந்திர நாடிவழியாக வரும் மூச்சுக் காற்று அம் முத்துக்களை வெளியிலும் கொண்டு வருகிறது. அவற்றில் ஒன்று மூக்கின் இடப்பாகத்தில் ஒட்டிக்கொண்டதோ என்று ஊகிக்கும் வண்ணம் முத்து மூக்குத்தி அணிந்த உன் நாசி விரைவில் உசிதமான பலனை அளிப்பதாகுக.

**நிவேதனம்** வெண்பொங்கல், தேன், பழம், தேங்காய்

# தேவியின் உதடுகள்

प्रकृत्याऽऽरक्तायास्तव सुदति दन्तच्छदरुचेः
प्रवक्ष्ये सादृश्यं जनयतु फलं विद्रुमलता ।
न बिंबं तद्बिंब-प्रतिफलन-रागा-दरुणितं
तुलामध्यारोढुं कथमिव विलज्जेत कलया ॥६२॥

ப்ரக்ருத்யாSSரக்தாயாஸ்—தவ ஸுததி தந்தச்சதருசே
ப்ரவக்ஷ்யே ஸாத்ருச்யம் ஜனயது பலம் வித்ருமலதா |
ந பிம்பம் தத்பிம்ப—ப்ரதிபலன—ராகாதருணிதம்
துலா—மத்யாரோடும் கதமிவ விலஜ்ஜேத கலயா ||

**சவளம் தரித்த கரத்தாய்! இதழின் தனிச் சிவப்புக்**
**குவமை பிறிதிலே; தின்றிடு கொவ்வையும் உற்றிடும்நாண்:**
**தவளக் கனி அவ் விதழ்நிற நீழலில்தான் சிவப்பாம்;**
**பவளம் பழுத்திடின் அன்றோ உவமை பகர்வதுவே.**

பொருள் : உன் உதடுகள் இயல்பாகவே செந்நிற முடையன. கோவைப்பழம் இயற்கையாகச் சிவந்ததன்று; உன் உதட்டின் சிவப்பு தின்னும் போது அதில் பிரதிபலிப்பதால் தான் அதுவும் சிவப்பாக இருக்கிறது. ஆகவே கோவைப்பழம் ஒரு கலை கூட உதட்டுச் சிவப்புடன் ஒப்பிட முடியாமையால் வெட்கமடையும். பவழக் கொடிக்குப் பழம் கிடையாது; அது பழத்தைத் தோற்றுவித்தால் அப்போது உவமையாகக் கூறலாம்.

(சவளம்—அங்குசம். தவளம்—வெண்மை.)

**நிவேதனம் :** உளுந்துப் பொங்கல்

# தேவியின் முக சந்திரன்

**स्मितज्योत्स्नाजालं तव वदनचन्द्रस्य पिबतां**
**चकोराणा-मासी दतिरसतया चञ्चु-जडिमा ।**
**अतस्ते शीतांशो-रमृतलहरी-माम्लरुचयः**
**पिबन्ति स्वच्छन्दं निशि निशि भृशं काञ्जिकधिया ॥**

ஸ்மிதஜ்யோத்ஸ்னஜாலம் தவ வதன-சந்த்ரஸ்ய பிபதாம்
சகோராணா-மாஸீ-ததிரஸதயா-சஞ்சு-ஜடிமா ।
அதஸ்தே சீதாம்சோ-ரம்ருதலஹரீ-மாம்லருசய:
பிபந்தி ஸ்வச்சந்தம் நிசி நிசி ப்ருசம் காஞ்ஜிகதியா ॥

**அண்ணல் இடங்கொள் அருளே! சகோரம் நின் ஆனனமாம்**
**தண்மதி மூரல் நிலவமு தத்தைத் தனி பருகி**
**உண்டி தெவிட்டிப் புளிங்காடி தன்னை உவந்தனவாய்**
**ஒண்மதிச் சீத நிலவை விருப்புட னுண்டிடுமே**

பொருள்: அருட் சக்தியே! உன் முகமே சந்திரன்; உன் புன்சிரிப்பே வெண்ணிலா என்று எண்ணிச் சகோர பக்ஷிகள் மிக்க இனிமை வாய்ந்த உன் புன்சிரிப்பாம் வெண்ணிலவை அதிக அளவில் பானம் செய்து விட்டதால் அவற்றுக்குத் தெவிட்டல் ஏற்பட்டுப் புளிப்பை மாற்று ரசமாகக் குடிக்க விரும்பிச் சந்திரனின் அமுதப் பெருக்கைப் புளித்த கழுநீர் என்று நினைத்து ஒவ்வொரு இரவிலும் அதை விருப்பத்துடன் பானம் செய்கின்றன.

**நிவேதனம்:** தேன், பழம், தேங்காய், தயிர்சாதம்

# தேவியின் நாக்கு

अविश्रान्तं पत्यु-र्गुणगण-कथाम्रेडनजपा
जपापुष्पच्छाया तव जननि जिह्वा जयति सा ।
यदग्रासीनायाः स्फटिकदृष-दच्छ-च्छविमयी
सरस्वत्या मूर्तिः परिणमति माणिक्यवपुषा ॥६४॥

அவிச்ராந்தம் பத்யுர்—குணகண—கதாம்ரேடனஜபா
ஜபாபுஷ்பச்சாயா தவ ஜநநி ஜிஹ்வா ஜயதி ஸா ।
யதக்ராஸீநாயா: ஸ்படிகத்ருஷ—தச்சச்சவி—மயீ
ஸரஸ்வத்யா மூர்த்தி: பரிணமதி மாணிக்யவபுஷா ॥

**காந்தன் புகழும் அழகும் திறலும் களிதிருவும்
சேர்ந்த திருக்குணம் பாடும் நின் நா எழிற்செம்பருத்தி
வாய்ந்திடு தேசினை வெல்லும்; நுனியமர் வாணி, வெண்மை
ஆர்ந்த உடல் நின் அருண நிறம்பெற் றழகுறுமே.**

பொருள்: செம்பருத்திப் பூப்போல் உள்ள உனது நாக்கு, எப்போதும் உன் கணவனான பரமசிவன் செய்த திரிபுர விஜயம் முதலிய மங்கலக் கதைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வதையே மந்த்ர ஜபமாகக் கொண்டுள்ளது. அந்த நாக்கின் நுனியில் வசிக்கின்ற காரணத்தால் தான் சரஸ்வதியின் படிகம் போன்ற வெளுத்த மேனி மாணிக்கம் போல் சிவப்பாக மாறுகின்றது.

**நிவேதனம்:** வெல்லப் பாயசம்,

# தேவியின் நிர்மால்யச் சிறப்பு

रणे जित्वा दैत्या-नपहृत-शिरस्त्रैः कवचिभिः
निवृत्तै-श्चण्डांश-त्रिपुरहर-निर्माल्य-विमुखैः ।
विशाखेन्द्रोपेन्द्रैः शशिविशद-कर्पूरशकला
विलीयन्ते मातस्तव वदनताम्बूल-कबलाः ॥६५॥

ரணே ஜித்வா தைத்யாந்—அபஹ்ருத—சிரஸ்த்ரை: கவசிபி:
நிவ்ருத்தைஸ் சண்டாம்ச—த்ரிபுரஹர—நிர்மால்ய—
விமுகை: ।
விசாகேந்த்ரோபேந்த்ரை: சசிவிசத—கர்ப்பூரசகலா
விலீயந்தே மாதஸ்தவ வதன—தாம்பூல—கபலா:

**போரில் அசுரரை வென்று கவசப் பொலிவுடனே**
**ஆரும் பவனம் அணயு முருகன் அரி மகவான்**
**கோரும் சிவசேடம் கொள்ளார் கருப்பூரக் கண்டமுடன்**
**ஆரியை! நின்முகத் தம்பலம் கூடி அயின்றனரே.**

பொருள் : பூசிக்கத் தக்கவளே! முருகன், திருமால், தேவேந்திரன் முதலியோர் இரும்புக் கவசம் பூண்டு போரில் அசுரர்களை வென்று திரும்ப உன் பவனம் அணைந்து உன்னருகே வரும்போது, சண்டிகேசர் பாகமான பரமசிவன் நிர்மால்யத்தைப் பொருட்படுத்தாமல், பச்சைக் கர்ப்பூரம் கலந்ததும், நீ வாயில் மென்று கொடுத்ததுமான தாம்பூலக் கவளங்களைப் பெற்று நன்கு மென்று தின்கின்றார்கள்.

**நிவேதனம் : தேன்**

# தேவியின் வாக்கு வன்மை

विपञ्चया गायन्ती विविध-मपदानं पशुपतेः
त्वयारब्धे वक्तुं चलितशिरसा साधुवचने ।
तदीयै-र्माधुर्यै-रपलपित-तन्त्रीकलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥६६॥

விபஞ்ச்யா காயந்தீ விவித-மபதானம் பசுபதே:
த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாதுவசனே ।
ததீயைர்-மாதுர்யை-ரபலபித-தந்த்ரீ-கலரவாம்
நிஜாம் வீணும் வாணீ நிசுலயதி சோலேன நிப்ருதம் ॥

உமை! நின் பரமர் பொற்ருேள் வீரம் யாழில் உளமுருகி
அமலை! கலை மகள் பாடத் தலை நீ அசைத்தணையாய்
இமையில் 'மிகநன்' றெனமொழி நாதம் எளிதடக்க
அமையும் என எணி யாழை உறையு ளடைத்தனளே.

பொருள் : உமையே! பரமசிவனின் பலவித சரித்திரத்தைத் தனது வீணையில் கானம் செய்கிருள். நீ அதைக் கேட்டு மகிழ்ச்சியுடன் தலையசைத்து 'ஆஹா' என்று சொல்ல ஆரம்பித்தாய். அந்தப் பேச்சினிமை வீணைத்தந்தி ஒலியைப் பரிகாசம் செய்வது போல் இருப்பதால் ஓசைப்படாமல் சரஸ்வதி உறைத்துணியால் தன் வீணையை மறைத்து விடுகிருள்.

**நிவேதனம் :** வெல்லம் சேர்த்த பொங்

# தேவியின் மோவாய்

करा‌ग्रेण स्पृष्टं तुहिनगिरिणा वत्सलतया
गिरीशेनो-दस्तं मुहुरधर-पानाकुलतया ।
करग्राह्यं शम्भोर्मुख मुकुरवृन्तं गिरिसुते
कथंकारं ब्रूम-स्तव चुबुक-मौपम्य-रहितम् ॥६७॥

கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் துஹிநகிரிணு வத்ஸலதயா
கிரீசேனேதஸ்தம் முஹுரதர பாநாகுலதயா।
கரக்ராஹ்யம் சம்போர்-முகமுகுரவ்ருந்தம் கிரிஸுதே!
கதங்காரம் ப்ருமஸ்-தவ சுபுக-மௌபம்ய ரஹிதம்॥

**ஏந்து மகவெனு மன்பால் இம்வான் எழிற்கைதொடக்**
**காந்தன் பரசிவன் காதலின் என்றுங் கரமலரால்**
**ஏந்தப் பொலியுஞ் சிபுகம் நிகரில் இறைவி! நின்றன்**
**காந்த முகப்படி மக்கலக் காம்பாய்க் கருதுவனே.**

பொருள்: இறைவியே! உன் மோவாய் உன் தந்தையான ஹிமவானுல் அன்புடன் தன் நுனிக் கையால் தொடப்பட்டது: அதரபான வேட்கையால் பரமசிவனுல் அடிக்கடி தம் கையால் உயரத் தூக்கப் பெறுவது: உன் முகமாகிய கண்ணுடியின் பிடிபோல் உள்ளது. வேறு எங்ஙனம் வருணிப்பேன்.

**நிவேதனம்:** பால் பாயசம், தாம்பூலம்

# தேவியின் கழுத்து

भुजाश्लेषान्नित्यं पुरदमयितुः कण्टकवती
तव ग्रीवा धत्ते मुख-कमलनाल-श्रिय-मियम् ।
स्वतः श्वेता कालागरु-बहुल-जम्बालमलिना
मृणाली-लालित्यं वहति यदधो हारलतिका ॥६८॥

புஜாச்லேஷாந்நித்யம் புரதமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முககமலநால ச்ரிய-மியம்।
ஸ்வத: ச்வேதா காலாகரு-பஹுல ஜம்பால-மலினு
ம்ருணுலீ–லாலித்யம் வஹதி யததோ ஹாரலதிகா ||

**மயங்கும் பரசிவன் தோள்முயக் கத்தால் வருபுளக**
**நயங்காண் கழுத்துமுக கமலத்து முள்நாள மன்ளே**
**தயங்குந் தரள வடம்மான் மதச்சேறு சார்தலினுல்**
**இயங்கும் வனசக் கொடியின் எழில் காட்டும் ஏந்திழையே.**

பொருள்: பரமசிவன் எப்போதும் தன் கைகளால் அணைத்துக் கொண்டிருப்பதால் உன் கழுத்து மயிர்க் கூச்சடைகிறது: அது உன் முகமாகிய தாமரைப் பூவின் முள்ளுடன் கூடிய தண்டு போல் காட்சி தருகிறது. தவிர நீ கழுத்தில் அணிந்த முத்து மாலை அகருகட்டைச் சந்தனக் கலவையில் பட்டு நிறம் மாறித் தாமரைக் கொடியின் அழகைக் காட்டும்.

**நிவேதனம்:** பால் பாயசம்

69

# தேவி கழுத்தின் மூன்று மடிப்புகள்

गले रेखास्तिस्रो गति-गमक-गीतैक-निपुणे
विवाह-व्यानद्ध-प्रगुणगुण-संख्या-प्रतिभुवः ।
विराजन्ते नानाविध-मधुर-रागाकर-भुवां
त्रयाणां ग्रामाणां स्थिति-नियम-सीमान इव ते ॥६९॥

கலே ரேகாஸ்திஸ்ரோ கதி-கமககீதைக-நிபுணே!
விவாஹ-வ்யாநத்த-ப்ரகுண்குண ஸங்க்யா ப்ரதிபுவ: ।
விராஜந்தே நாநாவித-மதுர-ராகாகர-புவாம்
த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி-நியம-ஸீமான இவ தே ॥

கதிகம கத்துடன் கீதம் பகர்நின் கழுத்தினிலே
வதியும் வரைக்குறி மூன்றும் மணத்தினில் மங்கலநாண்
பொதியுஞ் சரமூன் றழுந்திய தென்பன்; பொருந்திசையில்
துதை மூவகை நாதம் எல்லை வகுத்ததாச் சொல்லுவனே.

பொருள் : கதி, கமகம், கீதம் என்ற மூவகை இசையிலும் வல்ல உன் கழுத்தில் உள்ள மூன்று கோடுகள், விவாக நாளில் பரமசிவன் உன் கழுத்தில் இட்ட மங்கல சூத்திரத்துடன் மூன்று சரம் கட்டப்பட்டது என்பதைக் காட்டிக் கொடுப்பது என்று கருதுகிறேன்; மற்றும் பலவித ராகங்களுக்கு இருப்பிடமான ஷட்ஜம், மத்யமம், காந்தாரம் என்னும் மூன்று வகை கிராமங்களைப் பிரித்துக் காட்டுகிற எல்லைக் கோடுகள் என்றும் கருதுகிறேன்.

**நிவேதனம் :** தேன், தேங்காய், பழம், வெற்றிலைப்பாக்கு

70

# தேவி தோள் நான்கின் வருணனை

मृणाली-मृद्वीनां तव भुजलतानां चतसृणां
चतुर्भिः सौन्दर्यं सरसिजभवः स्तौति वदनैः ।
नखेभ्यः सन्त्रस्यन् प्रथम-मथना-दन्तकरिपोः
चतुर्णां शीर्षाणां सम-मभयहस्तार्पण-धिया ॥७०

ம்ருணாலீ-ம்ருத்வீனும் தவ புஜலதானும் சதஸ்ருணும்
சதுர்ப்பி: ஸௌந்தர்யம் ஸரஸிஜபவ:ஸ்தௌதி வதனை: |
நகேப்ய: ஸந்த்ரஸ்யன் ப்ரதம மதனுத்–அந்தகரிபோ:
சதுர்ணும் சீர்ஷாணும் ஸம-மபய–ஹஸ்தார்ப்பண தியா ||

**செங்கமலக் கொடி போலொளிர் நான்கு திருப்புயத்தை**
**'இங்கண் உரைத்த தலைக்கழிவில்லை' எனத் துணிந்து**
**சங்கரன் வெண்ணுகிர் கண்டஞ்சித் தாயே சரணமெனப்**
**பங்கயன் நான்கு முகத்தால் தினமும் பரவுவனே.**

பொருள் : தேவி! உன் கைகள் தாமரைக் கொடிகள் போல் மிருதுவானவை; ஒரு சமயம் பரமசிவன், பிரமனின் ஐந்தாவது தலையை நகத்தால் கிள்ளி எறிந்து விட்டார்; அதற்குப்பயந்து பிரமன் மீதமுள்ள தன் நான்கு தலைகளுக்கு ஒரேகாலத்தில் அபயம் அளிக்க வேண்டுமென்று உன் நான்கு கைகளின் அழகைத் தன் நான்கு வாய்களாலும் துதி செய்கின்றார்.

**நிவேதனம் :** மஞ்சள் பொங்கலும், தாம்பூலமும்

# தேவியின் கைவிரல் நகங்கள்

नखाना-मुद्योतै-र्नवनलिनरागं विहसतां
करणां ते कान्तिं कथय कथयामः कथमुमे ।
कयाचिद्वा साम्यं भजतु कलया हन्त कमलं
यदि क्रीडल्लक्ष्मी-चरणतल-लाक्षारस-चणम् ॥७१॥

நகாணு-முத்யோதைர்-நவநலின-ராகம் விஹஸதாம்
கராணும் தே காந்திம் கதய கதயாம: கதமுமே!
கயாசித்வா ஸாம்யம் பஜது கலயா ஹந்த கமலம்
யதி க்ரீடல்லக்ஷ்மீ சரண-தல-லாக்ஷா-ரஸ சணம் ||

**அந்தரி!** சீருகிர்ச் சோதியாற் காலை அலர் முளரிச்
சந்தம் நகைக்கும் இணைக்கரக் காந்தியுஞ் சாற்றரிதே;
செந்தா மரைமலர் செய்யாள் திருவடிச் செம்பஞ்சினுல்
சிந்துரவண்ணம் பெறில் கலை ஒப்பெனச் செப்புவமே.

பொருள் : அந்தரியே! உன் கைகள், தம் விரல்களில் உள்ள நகங்களின் காந்தியால் காலை மலர்ந்த தாமரை மலரின் ஒளியைப் பரிகசிக்கின்றன. செந்தாமரை மலருக்குத் தன்னுள் வசிக்கும் திருமகளின் உள்ளங் காலில் விளங்கும் செம்பஞ்சுக் குழம்பாலல்லவா அவ்வளவு ஒளி வந்துள்ளது. அந்தச் செயற்கை ஒளியும் பதினுறில் ஒருபங்கு தான் உன் நக சோபைக்கு ஈடாகும்.

**நிவேதனம் :** தேன்

# தேவியின் ஸ்தனங்கள்

**समं देवि स्कन्द-द्विपवदन-पीतं स्तनयुगं**
**तवेदं नः खेदं हरतु सततं प्रस्नुत-मुखम् ।**
**यदालोक्याशङ्काकुलित-हृदयो हासजनकः**
**स्वकुम्भौ हेरंबः परिमृशति हस्तेन झडिति ॥७२॥**

ஸமம் தேவி ஸ்கந்த த்விபவதன-பீதம் ஸ்தனயுகம்
தவேதம் ந: கேதம் ஹரது ஸததம் ப்ரஸ்னுத-முகம் ।
யதாலோக்யா சங்காகுலித ஹ்ருதயோ ஹாஸஜனக:
ஸ்வகும்பௌ ஹேரம்ப: பரிம்ருசதி ஹஸ்தேன ஜடிதி

**நெருங்குங் கனதனம் மத்தகம் என்று நினைந்தயிர்த்துத்**
**தருக்குங் கரிமுகன் கையால்தன் கும்பம் தடவுவனல்;**
**புரக்குங் கணேசன் குமரன் அருந்தப் புரிந்துடன் பால்**
**சுரக்கும் நுனிகொள் தனயுகம் தீமை துடைக்குமன்றே.**

பொருள் : யானை முகக் கடவுள், தாயின் தனம் தன், மத்தகமோ எனச் சந்தேகித்து தன் தலையில் உள்ள கும்பங் களை அவை உள்ளனவா என்று தடவிப் பார்த்துக் கொள் கிறார். கணபதி, முருகன் என்னும் இரு குழந்தைகளாலும் பானம் செய்யப்படும் அத்தகு தேவியின் தனங்கள் நம் துன்பங்களை அகற்றுவன ஆகுக.

**நிவேதனம் : தேன்**

# தேவியின் ஸ்தனங்கள்

अमू ते वक्षोजा-वमृतरस-माणिक्य-कुतुपौ
न सन्देहस्पन्दो नगपति-पताके मनसि नः ।
पिबन्तौ तौ यस्मा-दविदित-वधूसङ्ग-रसिकौ
कुमारावद्यापि द्विरदवदन-क्रौञ्चदलनौ ॥७३॥

அமூ தே வக்ஷோஜா-வம்ருதரஸ-மாணிக்ய-குதுபௌ
ந ஸந்தேஹஸ்பந்தோ நகபதி-பதாகே! மநஸி ந: ।
பிபந்தௌ தௌ-யஸ்மாதவிதித-வதூஸங்க-ரஸிகௌ
குமாராவத்யாபி த்விரதவதன-க்ரௌஞ்சதலநௌ ॥

**முக்க ணிறைக்கு மயலே விளைக்கு முலை தரும்பால்**
**மக்கள் இருவர் பருகிக் குமரராய் மன்னிடுவர்;**
**அக்கடல் தோன்றும் அமுதம் எடுத்தே அடைத்திடுகட்**
**செக்கர் மணிக் கலசம் தனம் என்றே தெளிகுவளே.**

பொருள்: உன் இரண்டு ஸ்தனங்களும் அமுத ரசத்தால் நிறைக்கப்பட்ட மாணிக்கக் கலசம் என்றே எண்ணுகிறேன்; இதைப் பானம் செய்து கொண்டிருக்கிற காரணத்தால் தான் கணபதியும் முருகனும் என்றும் குழந்தைகளாகவே இருந்துவிட்டார்கள்.

**நிவேதனம்: தேன்**

# 74

## தேவியின் இரு தனங்களின் நடுப்பகுதி

**वहत्यम्ब स्तम्बेरम-दनुज-कुंभप्रकृतिभिः**
**समारब्धां मुक्तामणिभि-रमलां हारलतिकाम् ।**
**कुचाभोगो बिम्बाधर-रुचिभि-रन्तः शबलितां**
**प्रताप-व्यामिश्रां पुरदमयितुः कीर्तिमिव ते ॥७४॥**

வஹத்யம்ப ஸ்தம்பேரம-தனுஜ கும்பப்ரக்ருதிபி:
ஸமாரப்தாம் முக்தாமணிபி ரமலாம் ஹாரலதிகாம் ।
குசாபோகோ பிம்பாதர-ருசிபி-ரந்த: சபலிதாம்
ப்ரதாப-வ்யாமிச்ராம் புரதமயிது: கீர்த்திமிவ தே ॥

**ஆனை முகத்தசு ரன்பெருங் கும்ப மதில் உதயம்**
**ஆன எழில்முத் திணைந்திடு மாலை, அதரஒளி**
**தானதிற் பட்டிட மாமணி காட்டித் தனந்தவழும்;**
**ஆனை உரித்தவன் வீரம் புகழ்என் றறைகுவனே.**

பொருள்: கஜமுகாசுரனைக்கொன்று அவன்மத்தகத்திலிருந்து எடுத்த முத்துக்களைக் கோத்து மாலையாக்கித் தன் அன்னைக்குக் கணபதி சூட்டினன்; இருதனங்களின் நடுப்பகுதி அம்முத்து மாலையைத் தாங்குகிறது. அம்முத்துக்களில் உன் சிவந்த உதட்டின் ஒளிபட்டு மாணிக்க மாலையாக செந்நிறம் காட்டும். அம்மாலையில் தோன்றும் வெண்மை ஈசன் புகழைக் காட்டும்; செம்மை ஈசன் வீரத்தைக் காட்டும்.

**நிவேதனம்:** பால் பாயசம்,

## 75

# தேவியின் திருமுலைப் பால்

तव स्तन्यं मन्ये धरणिधरकन्ये हृदयतः
पयः पारावारः परिवहति सारस्वतमिव ।
दयावत्या दत्तं द्रविडशिशु-रास्वाद्य तव यत्
कवीनां प्रौढाना-मजनि कमनीयः कवयिता ॥७५॥

தவ ஸ்தன்யம் மன்யே தரணிதரகந்யே ஹ்ருதயத:
பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வத–மிவ।
தயாவத்யா தத்தம் த்ரவிடசிசு-ராஸ்வாத்ய தவ யத்
கவிீனும் ப்ரௌடானும் அஜனி கமனீய: கவயிதா ॥

**தருணி! தனத்தில் தழைந்திடுபால் சிந்தை தன்னிலுண்டாய்
அருள் வாழ் வளிக்கு மதுரக் கவியலை ஆழ்கடலே;
பருகுங் கவுணியக் கன்றெனு மேகம் பவனடிக்கே
பெருகுமெய்ஞ் ஞானக் கவிதை மழைதனைப் பெய்ததுவே.**

பொருள்: என்றும் யௌவனத்தில் இருப்பவளே! உன் தனங்களிலிருந்து பெருகும் பால், இதயத்திலிருந்து தோன்றிய பாற்கடல் போலவும், சரஸ்வதியின் வாக்விலாச வெள்ளம் போலவும் பெருகுகிறது என நினைக்கிறேன்; உன் பாலை அருந்தித் திராவிடநாட்டில் பிறந்த 'ஞான சம்பந்தன்' என்ற மேகம், இறைவன் திருவடியில் சேர்க்கும் மெஞ்ஞானக் கவிதை மழை பொழிந்ததை அனைவரும் அறிவர்.

**நிவேதனம் :** வெண்பொங்கல், பழம், தேன்

# தேவியின் திருநாபி

हरक्रोध-ज्वालावलिभि-रवलीढेन वपुषा
गभीरे ते नाभीसरसि कृतसङ्गो मनसिजः ।
समुत्तस्थौ तस्मा-दचलतनये धूमलतिका
जनस्तां जानीते तव जननि रोमावलिरिति ॥७६॥

ஹரக்ரோத–ஜ்வாலாவலிபி-ரவலீடேன வபுஷா
கபீரே தே நாபீ-ஸரஸி க்ருதஸங்கோ மனஸிஜ: ।
ஸமுத்தஸ்தௌ தஸ்மாத்–அசலதனயே தூமலதிகா
ஜனஸ்தாம் ஜானீதே தவ ஜநநி ரோமாவலிரிதி ॥

**யோகு புரிநின் மகிழ்நர் சினக்கன லூடுபுக்கு**
**வேகும் உடல் மதன் நாபி மடுவில் விழுந்தளவில்**
**வேகத் துடன்மே லெழுந்தூம ரேகையை மேதினியும்**
**மோகம் விளைக்கும் உரோமா வளியாய் மொழிந்திடுமே.**

பொருள்: யோகம் புரியும் பரமசிவனின் கோபாக்னியால் மன்மதன் சூழப்பட்டுத் தாபம் தாங்காமல் உன் தொப்புளாகிய மடுவில் குதித்து மூழ்கி விட்டான்; அவன் நெருப்புடன் நீரில் புகுந்ததால் மெல்லிய புகை மேலே கிளம்புகிறது; அந்தப் புகைக்கோடு தான், உன் நாபிக்கு மேலே உள்ள 'ரோமாவளி' என மக்கள் நினைக்கின்றனர்.

**நிவேதனம்:** தேங்காய், பழம், தயிர்சாதம்

# இடுப்பின் மேல்பாகத்துள்ள ரோமராசி

यदेतत्कालिन्दी-तनुतर-तरङ्गाकृति शिवे
कृशे मध्ये किञ्चिज्जननि तव यद्भाति सुधियाम् ।
विमर्दा-दन्योन्यं कुचकलशयो-रन्तरगतं
तनूभूतं व्योम प्रविशदिव नाभिं कुहरिणीम् ॥७७॥

யதேதத் காலிந்தீ-தநுதர-தரங்காக்ருதி சிவே!
க்ருசே மத்யே கிஞ்சிஜ்ஜநநி தவ யத்பாதி ஸுதியாம் ।
விமர்தா-தன்யோன்யம் குசகலசயோ-ரந்தரகதம்
தநூபூதம் வ்யோம ப்ரவிசதிவ நாபிம் குஹரிணீம் ॥

**வண்ண முலைக்கல சங்கட் கிடைச்சிறு நுண்வெளியும்
எண்ணுறும் உந்திமுழைக்குள் நுழைந்தா லெனமிளிர்ந்து
நுண்ணிடைமீதே தெளி நீர் யமுனையின் நுண்ணலைபோல்
நண்ணு மொளியை உரோமா வளியா நவிலுவரே.**

பொருள் : மிக நுட்பமான உன் இடையின் மேல் கரு நிறமுள்ள யமுனை நதியின் சிறிய அலை போன்ற ஒரு ரோம வரிசை நுட்பமாய்க் காணப்படுகிறது. இது இரு தனங் களுக்கும் இடையே உள்ள குறுகிய ஆகாசந்தானோ? அக் குறுகிய ஆகாசம், தனங்களின் உரைசலால் தான் அழிந்து விடுவோம் எனப் பயந்து கீழே நாபிக்குள் ஒளிந்து கொள்ளச் செல்கிறதோ என்று எண்ணத் தோன்றும்.

**நிவேதனம் :** தேனும், பழமும்

# தேவியின் நாபி

स्थिरो गङ्गावर्तः स्तनमुकुल-रोमावलि-लता-
कलावालं कुण्डं कुसुमशर-तेजो-हुतभुजः ।
रते-र्लीलागारं किमपि तव नाभिर्गिरिसुते
बिलद्वारं सिद्धे-र्गिरिश-नयनानां विजयते ॥७८॥

ஸ்திரோ கங்காவர்த்த: ஸ்தன முகுல-ரோமாவலி-லதா
கலாவாலம் குண்டம் குஸுமசர-தேஜோ ஹுதபுஜ: ।
ரதேர்-லீலாகாரம் கிமபி தவ நாபிர்-கிரிஸுதே!
பிலத்வாரம் ஸித்தேர்-கிரிச-நயநானும் விஜயதே ॥

**திரமே படைத்திடு கங்கைச் சுழி; தனச் செம்முகைசேர்**
**உரமார் உரோமா வளி வல்லிப் பாத்தி; உயர்மதனன்**
**இரத ஒளித்தீ அரும்பிடு குண்டம்; இரதிஇலம்**
**பரமன் விழித்தவச் சித்திச் சுரங்கம் பரை உந்தியே**

பொருள்: தேவியின் நாபி, அசைவற்ற கங்கையின் சுழல்; தனங்களாகிய தாமரை மொட்டுக்களைத் தாங்கும் ரோமாவளியாம் தாமரைத் தண்டுகளுக்குத் தண்ணீர் பாயும் பாத்தி; மன்மதன் ஒளியாகிய அக்னிக்கு ஹோம குண்டம்; இரதி தேவியின் விளையாடும் இல்லம்; சிவபிரான் கண்களின் தவப் பயனுக்குக் குகையின் துவாரம்.

**நிவேதனம்:** வெண்பொங்கலும், உளுந்து வடையும்

# தேவியின் இடுப்பு

निसर्ग-क्षीणस्य स्तनतट-भरेण क्लमजुषो
नमन्मूर्तेर्नारीतिलक शनकैस्त्रुट्यत इव ।
चिरं ते मध्यस्य त्रुटित-तटिनी-तीर-तरुणा
समावस्था-स्थेम्नो- भवतु कुशलं शैलतनये ॥७९॥

நிஸர்க-க்ஷீணஸ்ய ஸ்தன-தட-பரேண க்லமஜுஷோ
நமன்மூர்த்தேர்-நாரீதிலக சனகைஸ்-த்ருட்யத இவ ।
சிரம் தே மத்யஸ்ய த்ருடித-தடிநீ-தீர-தருண
ஸமாவஸ்தா-ஸ்தேம்னோ பவது குசலம் சைலதனயே ॥

**தாயே! இயல்பில் மெலிந்து தனதடம் தாங்ககிலா**
**தாயும் நிலையில் வளைந்து திருமேனி யாம் நதிக்கண்**
**தோயும் அழகு வெள்ளத்தே இடிகரைத் தோன்றுமரம்**
**ஆயுந் திகழு மிடைக்குக் குசலம் உண்டாகுகவே.**

பொருள் : உன்னுடைய இடை இயற்கையில் மெலிந்தது; தனங்களின் பாரம் தாங்காமல் ஒடிந்து விடுமோ என்று எண்ணும்படி வளைந்துள்ளது; எனவே உடலாம் நதியின் அழகு வெள்ளத்தால் இடிந்து போன கரையிலுள்ள மரத்தின் நிலையில் உள்ளது; இத்தகைய உன் இடை பல்லாண்டு பல்லாண்டு சேமமாக இருக்கட்டும்.

**நிவேதனம்:** பால் பாயசமும், தேனும்

## இடையில் உள்ள மூன்று மடிப்பு

कुचौ सद्यः स्विद्य-त्तटघटित-कूर्पासभिदुरौ
कषन्तौ दोर्मूले कनककलशाभौ कलयता ।
तव त्रातुं भङ्गादलमिति वलग्नं तनुभुवा
त्रिधा नद्धं देवि त्रिवलि लवलीवल्लिभिरिव ॥८०॥

குசௌ ஸத்ய: ஸ்வித்யத்-தடகடித-கூர்ப்பாஸபிதுரௌ
கஷந்தௌ தோர்மூலே கனக-கலசாபௌ கலயதா !
தவ த்ராதும் பங்காத் அலமிதி வலக்னம் தனுபுவா
த்ரிதா நத்தம் தேவி த்ரிவலி லவலீ-வல்லிபிரிவ ||

**கச்சைத் தொலைத்தே இறுகிக்கனகக் கலசஒளி**
**நச்சிப் புடையில் நெருக்கிக் குலவும் நகில்படைத்த**
**விச்சை அநங்கன் இடைகாக்க மூன்றுமிகுமடிப்பாம்**
**அச்சிறு மூன்று கொடிச்சுற்றமைத்தனன் ஆரணங்கே.**

பொருள் : *(சிவபிரான் பெருமையை நினைத்தவுடன்)* தங்கக் குடங்கள் போன்ற உன் ஸ் த ன ங் க ள் வேர்த்துப் பூரித்து ரவிக்கையைக்கிழித்துக்கொண்டு வளர்ந்து அக்குளில் உராய்வதைப் பார்த்த மன்மதன், தனபாரத்தால் இடை ஒடியாமல் இருக்க வேண்டுமே எனப் பயந்து அதைக் காப்ப தற்காக 'திரிவளி' என்னும் மும்மடிப்பாம் வல்லிக் கொடி களால் இடையை மூன்று சுற்றுகக் கட்டியிருக்கிறுனே என்று எண்ணத் தோன்றும்.

**நிவேதனம் :** தேன்

81

# நிதம்பவருணனை

गुरुत्वं विस्तारं क्षितिधरपतिः पार्वति निजात्
नितम्बा-दाच्छिद्य त्वयि हरणरूपेण निदधे ।
अतस्ते विस्तीर्णो गुरुरयमशेषां वसुमतीं
नितम्ब-प्राग्भारः स्थगयति लघुत्वं नयति च ॥८१॥

குருத்வம் விஸ்தாரம் க்ஷிதிதரபதி: பார்வதி நிஜாத்
நிதம்பா தாச்சித்ய த்வயி ஹரணரூபேண நிததே
அதஸ்தே விஸ்தீர்ணோ குருரய-மசேஷாம் வஸுமதீம்
நிதம்ப-ப்ராக்பார: ஸ்தகயதி லகுத்வம் நயதி ச ||

**கொத்தார் பொழில் சேர் இமவெற்பரசன் குலமலையின்**
**நத்துமத் தாழ்வரை தன்னில் எடுத்து நனி வழங்கும்**
**அத்தனை பாரம் அகலம் நிதம்ப மடைந்தமையால்**
**வித்தகி; பூமி புகழை மறைத்து விளங்கிடுமே.**

பொருள்: உன் தந்தை மலையரசன், கனமாகவும் விசாலமாகவும் உள்ள தன்மையைத் தாழ்வரையிலிருந்து எடுத்து ஸ்த்ரீதனமாக உனக்குக் கொடுத்துள்ளார்; அக் காரணத்தால் பெரிதாகவும் விசாலமாகவும் உள்ள உன் பின்புறம், இப்பூவுலகனைத்தையும் மறைக்கிறது; மேலும் அதை லேசாகச் செய்துவிடுகிறது.

**நிவேதனம்:** உளுந்து வடையும், வெல்லப் பாயசமும்

# தேவியின் துடையும் முழங்கால்களும்

करीन्द्राणां शुण्डान् कनककदली-काण्डपटलीं
उभाभ्या-मूरूभ्या-मुभयमपि निर्जित्य भवती ।
सुवृत्ताभ्यां पत्युः प्रणति-कठिनाभ्यां गिरिसुते
विधिज्ञे जानुभ्यां विबुध-करिकुंभ-द्वयमसि ॥८२॥

கரீந்த்ராணும் சுண்டான் கனககதலீ-காண்டபடலீம்
உபாப்யாமுருப்யா-முபயமபி நிர்ஜித்ய பவதீ !
ஸுவ்ருத்தாப்யாம் பத்யு: ப்ரணதி-கடினுப்யாம் கிரிஸுதே
விதிஜ்ஞே ஜானுப்யாம் விபுத-கரிகும்ப-த்வய-மஸி ||

பொன்னூர் கதலி புறங்காட்டி ஓடப் பொலிகுறங்கு,
கன்னக் களபப் புழைக்கையை வென்று களிதுளும்பும்;
உன்னும் பதியை வணங்கிக் கடின முறு முழந்தாள்
துன்னுஞ் சதமகன் வேழத்தின் கும்பம் தொலேத்தனவே.

பொருள்: உனது துடைகளால் தங்கமயமான வாழை மரங்களேயும், மத யானேயின் துதிக்கைகளேயும் வெற்றி கொண்டுள்ளாய்; மற்றும் நீ பரமசிவனே அடிக்கடி பணிவதால் சற்றுக் கடினமான உன் இரண்டு முழங்கால்களாலே இந்திரன் யானேயாம் ஐராவதத்தின் தலேமீதுள்ள இரண்டு கும்பங்களேயும் வெற்றி கொள்கிருய்.

**நிவேதனம்:** திராக்ஷைப் பழமும், தேனும்

# முழங்கால்களுக்குக் கீழ்ப்பகுதி

पराजेतुं रुद्रं द्विगुणशरगर्भौ गिरिसुते
निषङ्गौ जङ्घे ते विषमविशिखो बाढ-मकृत ।
यदग्रे दृश्यन्ते दशशर-फलाः पादयुगली-
नखाग्रच्छद्मानः सुर-मकुट-शाणैक-निशिताः ॥८३॥

பராஜேதும் ருத்ரம் த்விகுணசரகர்ப்பௌ கிரிஸுதே
நிஷங்கௌ ஜங்கே தே விஷமவிசிகோ பாட-மக்ருத।
யதக்ரே த்ருச்யந்தே தசசர-பலா: பாதயுகலீ-
நகாக்ரச்சத்மான: ஸுர-மகுட-சாணைக-நிசிதா: ॥

**சாரும் அமரர் தொழவே மகுடமாஞ் சாணதனில்**
**ஏருடன் தீட்டி ஒளிரும் 'நகநுனை' என்னுமொளி**
**தேருங்கணைபத்தும்; நற்கணைக்கால் தூணி சேர்த்தலவோ**
**போருக் கெனவரு மாரன் சிவன்பகை போக்குவனே.**

பொருள்: பரமசிவனை வெற்றி கொள்ளத் தன்னிடம் உள்ள ஐந்துபாணங்கள் போதவில்லை; அதற்காக உன் முழங் காலுக்குக் கீழ்ப்பாகங்களாகிய இரண்டு அம்பறுத் தூணி களில் பத்து பாணங்களை நிரப்பியுள்ளான்; அந்த பாணங்கள் உன் காலில் உள்ள பத்து விரல்களே; இந்த விரல்களின் நகங்கள் பாணத்தின் இரும்பு நுனிகள் போல் உள்ளன; அவை உன்னை வணங்கும் தேவர்களின் மணிக் கிரீடங் களாகிய சாணைக்கல்லில் தீட்டப்பட்டவை.

**நிவேதனம்:** தேனும் வெல்லமும் சேர்த்த பாயசம்

# தேவியின் பாதாரவிந்தம்

श्रुतीनां मूर्धानो दधति तव यौ शेखरतया
 ममाप्येतौ मातः शिरसि दयया देहि चरणौ ।
ययोः पाद्यं पादः पशुपति-जटाजूट-तटिनी
 ययो-र्लाक्षा-लक्ष्मी-ररुण-हरिचूडामणि-रुचिः ॥८४॥

ச்ருதீனும் மூர்த்தானே தததி தவ யௌ சேகரதயா
மமாப்யேதௌ மாத: சிரஸி தயயா தேஹி சரணௌ ।
யயோ: பாத்யம் பாத: பசுபதி-ஜடாஜூட-தடிநீ
யயோர்-லாக்ஷா-லக்ஷ்மீ: அருண-ஹரிசூடாமணிருசி: ॥

**உளமகிழ் காந்தன் சடைக் கங்கை பாய்ந்தே உடன்விளக்கக்**
**கிளர்மால் முடிமணி மாணிக்கப் பேரொளி, கேடில்செம்பஞ்**
**சொளிநிகர் பாதங்கள் வேத முடியில் ஒளிர்வதுபோல்**
**எளியவன் சென்னியிற் சாமளே! வைக்க இரங்குதியே.**

பொருள் : பச்சை கலந்த கறுப்பு வர்ணமானவளே! உன் திருவடிகள், பிரணய காலத்தில் சிவன் சடையில் தங்கும் கங்கை நீரால் கழுவப்படுகின்றன! மற்றும் உன் திருவடிகளை வணங்கும் திருமாலின்முடியிலுள்ள கௌஸ்துப மணியின் காந்தியால் அத்திருவடிகள் செம்பஞ்சுக்குழம்பால் சிவப்பேறியதாகத் தோன்றும்; உபநிடதங்கள் தம் தலைகளில் அணிந்து கொள்ளும் சிறப்புமிக்க அத்திருவடிகளை ஏழையான என் தலையிலும் அமர்த்துவாயாக.

**நிவேதனம் :** பால்பாயசம், தேன், சித்ரான்னம்

# தேவியின் பாதங்கள்

नमोवाकं ब्रूमो नयन-रमणीयाय पदयोः
तवास्मै द्वन्द्वाय स्फुट-रुचि-रसालक्तकवते ।
असूयत्यत्यन्तं यदभिहननाय स्पृहयते
पशूना-मीशानः प्रमदवन-कङ्केलितरवे ॥८५॥

நமோவாகம் ப்ரூமோ-நயன-ரமணீயாய பதயோ:
தவாஸ்மை த்வந்த்வாய ஸ்புட-ருசி-ரஸாலக்தகவதே ।
அஸூயெத்யத்யந்தம் யதபிஹநநாய ஸ்ப்ருஹயதே
பசூனா-மீசான: ப்ரமதவன-கங்கேலி-தரவே ॥

**திரிபுரஞ் செற்ருேன், சிரத்தில் தொடர்புறச் சிந்தைசெயும்
அரியநின் பாதம் இளமரக்காவில் அசோகு தொட
எரியுற அம்மரம் நோக்குவன்; என்றென்று மித்தகுசீர்
மருவும் பதாம்புயம் நெஞ்சாரப் போற்றி வணங்குவனே**

பொருள்: உன் திருவடிகளால் உதைக்கப்பட வேண்டும் என்று ஆசைப்படும் உத்யானவனத்துள்ள அசோக மரத்தைப் பார்த்துப் பரமசிவன் பொருமை கொள்கிருர். பிரணய கோப காலத்தில் உன் திருவடிகளால் உதைக்கப் பெறவேண்டும் என்று தான் ஆசைப்படுதல் போல இந்த அசேதனமரம் விரும்புவது சரியன்று எனப் பொருமை கொள்கிருர். அந்த பாக்யம் தனக்குக் கிடைத்திலதே என்றும் எண்ணுகிருர். (கற்புடைக் கன்னியர் அசோக மரத்தைக் காலால் உதைத்தால் அது மலரும் என்பது மரபு) இத்தகு திருவடிகளுக்கு 'நமஸ்காரம்' என்று பணிகின்றேன்.

**நிவேதனம்:** பால் பாயசமும், தேனும்

# தேவியின் திருவடிமகிமை

मृषा कृत्वा गोत्रस्खलन-मथ वैलक्ष्यनमितं
ललाटे भर्तारं चरणकमले ताडयति ते ।
चिरादन्तः शल्यं दहनकृत-मुन्मूलितवता
तुलाकोटिक्वाणैः किलिकिलित-मीशानरिपुणा ॥८६॥

ம்ருஷா க்ருத்வா கோத்ரஸ்கலன-மத வைலக்ஷ்யநமிதம்
லலாடே பர்த்தாரம் சரணகமலே தாடயதி தே ।
சிராதந்த: சல்யம் தஹநக்ருத-முன்முலிதவதா
துலா கோடிக்வாணை: கிலிகிலித-மீசான-ரிபுணா ॥

**மற்றோர் மடந்தைபாற் காதல் விளக்கி மலரணையில்
உற்றநின, அவள் பேரிட்டழைத்திட உன்பதமும்
செற்றமுட னரன் நெற்றி உதைத்திடத் தீர்ந்தபகை
வெற்றி வசந்தன் குரலே சிலம்பு விளம்பொலியே.**

பொருள் ; உன் திருவடிகளால் உதைபட வேண்டும் என்ற ஆசையால் பரமசிவன் தான் வேறொரு பெண்ணைக் காதலிப்பதுபோல் நடித்து அவள் பெயரால் உன்னை அழைத்துச் சினமூட்ட நீ அவர் நெற்றிக் கண்ணில் உதைத்தாய்; இதைக் கண்ட மன்மதன் கண்ணால் தன்னை எரித்த பழங்கோபத்தைவிட்டு உன் காற்சிலம்பின் ''கிலி கிலி'' ஒலியால் 'வென்றேன், வென்றேன்' என்று வெற்றி ஒலி எழுப்புகிறான் போலும்.

**நிவேதனம்:** பால் பாயசம், வாழைப்பழம், தேங்காய்

# தேவி திருவடிச் சிறப்பு

हिमानी-हन्तव्यं हिमगिरि-निवासैक-चतुरौ
निशायां निद्राणं निशि चरमभागे च विशदौ ।
वरं लक्ष्मीपात्रं श्रिय-मतिसृजन्तौ समयिनां
सरोजं त्वत्पादौ जननि जयत-श्चित्रमिह किम् ॥८७॥

ஹிமானீ-ஹந்தவ்யம் ஹிமகிரி-நிவாஸைக-சதுரௌ
நிசாயாம் நித்ராணம் நிசி சரமபாகே ச விசதௌ |
வரம் லக்ஷ்மீபாத்ரம் ச்ரிய-மதிஸ்ருஜந்தௌ ஸமயினும்
ஸரோஜம் த்வத்பாதௌ ஜநநி ஜயதஸ்-சித்ரமிஹ கிம் ||

இமய மலையில் உலவும்; நிசிபகல் ஏற்றலரும்;
சமய அடியார் மனையில் பெருந்திருத் தானருளும்;
உமை! நின் பதாம்புயம்; கஞ்சம் பனியில் உதிர்தளமாம்;
அமையு முகுளம் நிசியில் திருமனை ஆகிடுமே.

பொருள் : உன் திருவடித் தாமரைகள், இமயமலையிலும், காலையும், மாலையும் சற்றும் சுருங்காமல் மலர்ந்திருப்பவை; சமய மதத்தை ஒட்டிப் பக்தி செய்பவர்க்குச் செல்வத்தை (திருவை) அள்ளித் தருபவை. ஆனல் தாமரை மலர்கள் இலக்குமி இருக்க இடமாகத்தான் ஆகும்; பனியில் உதிர்ந்து போகும் இதழ்களை உடையவை; இரவில் சுருங்குபவை எனவே அவற்றை உன்திருவடிகள் வெற்றிகொண்டன

**நிவேதனம் :** பால் பாயசம், பழம், தேங்காய்

# தேவியின் திருவடி நுனி

पदं ते कीर्तीनां प्रपदमपदं देवि विपदां
कथं नीतं सद्भिः कठिन-कमठी-कर्पर-तुलाम् ।
कथं वा बाहुभ्या-मुपयमनकाले पुरभिदा
यदादाय न्यस्तं दृषदि दयमानेन मनसा ॥८८॥

பதம் தே கீர்த்தீனும் ப்ரபதம்-அபதம் தேவி விபதாம்
கதம் நீதம் ஸத்பி: கடின-கமடீ-கர்ப்பர-துலாம் |
கதம் வா பாஹுப்யா முபயமநகாலே புரபிதா
யதாதாய ந்யஸ்தம் த்ருஷதி தயமாநேன மநஸா ||

பஞ்சே அழுத்தினும் வாடும் புகழ்சேர் பதாம்புயம், நூல்
விஞ்சையர் ஆமையின் வன்புற ஒடெனல் வீணுரையே;
அஞ்சா திறைவன் திருக்கரத் தாலெடுத் தம்மிவைத்த
வஞ்சத்தை ஏது சொல்வேன் நவகோணம் வளர்பவளே.

பொருள்: உன் திருவடிகளின் நுனி புகழின் உறைவிடம்; பரமசிவன் உன்னைத் திருமணம் புரிந்தபோது கருணை காட்டாது உன் திருவடி நுனியைப் பற்றி அம்மிமீது மெதுவாக வைத்ததே வஞ்சம்; இத்தகைய மெத்தென்ற நின் திருவடி நுனியை மிகக் கடினமான ஆமையின் முதுகோட்டிற்குச் சமமெனக் கூறுதல் தகாது.

**நிவேதனம்:** பால் பாயசம், பழம், தேங்காய்

## 89

# தேவியின் திருவடி நகம்

नखै-र्नाकस्त्रीणां करकमल-संकोच-शशिभिः
तरूणां दिव्यानां हसत इव ते चण्डि चरणौ ।
फलानि स्वःस्थेभ्यः किसलय-कराग्रेण ददतां
दरिद्रेभ्यो भद्रां श्रियमनिश-मह्नाय ददतौ ॥८९॥

நகைர்-நாகஸ்த்ரீணும் கரகமல—ஸங்கோச-சசிபி :
தருணும் திவ்யானும் ஹஸத இவ தே சண்டி சரணௌ ।
பலானி ஸ்வ:ஸ்த்தேப்ய: கிஸலய-கராக்ரேண தததாம்
தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியமனிசம்-அஹ்னய தததௌ॥

**அற்றவர்க்கும் பொருள் கூட்டு மடிமலர் அம்மை! பொன்னு**
**டுற்றவர்க்கே பயன் கூட்டிடு கற்பக ஒண்தருவை;**
**முற்றும் அந் நாக மகளிர் கரபற்ப மூடச்செயும்**
**கற்றை நிலாவால் நகைக்க உகிராக் கழறுவரே.**

பொருள் : அம்மையே! தேவருலகக் கற்பக தருக்கள் தம் தளிர்களாகிய கைகளால் தேவர்களுக்கு மட்டுமே கோரும் பலன்களை அளிப்பவை. உன் திருவடிகளோ தேவர்க்கும் ஏழைக்கும் நிறை செல்வத்தைக் கோரிய கணத்திலேயே அளிப்பவை. உன் 'கால் நகங்கள்' ஆகிய சந்திரர்கள் தேவ மாதர்களின் கைகளாகிய தாமரை மலர்களைச் சுருங்கச் செய்பவை; எனவே கற்பகத் தருக்கள் கைகளால் கொடுப்பவைகளை நீ கால்களாலேயே கொடுத்து உன் கால் நகங்களின் மதி ஒளியால் அவைகளைப் பரிகசிக்கிருய்.

**நிவேதனம் :** வெல்லப் பாயசமும், தேனும்

# தேவியின் திருவடிகள்

ददाने दीनेभ्यः श्रियमनिश-माशानुसदृशीं
अमन्दं सौन्दर्य-प्रकर-मकरन्दं विकिरति ।
तवास्मिन् मन्दार-स्तबक-सुभगे यातु चरणे
निमज्जन् मज्जीवः करणचरणः षट्चरणताम् ॥९०॥

ததானே தீனேப்ய: ச்ரியமனிச-மாசாநுஸத்ருசீம்
அமந்தம் ஸௌந்தர்ய-ப்ரகர-மகரந்தம் விகிரதி |
தவாஸ்மின் மந்தார-ஸ்தபக-ஸுபகே யாது சரணே
நிமஜ்ஜந்-மஜ்ஜீவ: கரணசரண: ஷட்சரணதாம் ||

அளிக்கும் பொருட்செல்வம் தீனர்க்கிரட்டி அடிக்கமலம்
துளிக்கும் அழகாம் நறவின் பெருக்கை இத் தூயமனம்
விளக்கும் பொறி ஐந்தாறுகாற் சீவன் மெலநுழைந்தே
களிக்கும் வகையின் அருள்வாய் சரணம் கனங்குழையே.

பொருள்: உன் திருவடிக் கமலங்கள் ஏழைகள் விரும்பும் செல்வத்தை இரட்டிப்பாக அளிப்பவை; அழகாகிய தேனைப் பெருகியோடச் செய்பவை; இத்தகைய உன் திருவடிக் கமலங்களில் ஐம்புலன்கள், மனம் இவற்றுடன் நான் நுழைந்து ஆறு கால்களுடன் கூடிய வண்டாக ஆவேனாக.

**நிவேதனம்:** பாயசமும், தேனும்

## 91

# தேவியின் நடையழகு

पदन्यास-क्रीडा-परिचय-मिवारब्धु-मनसः
स्खलन्तस्ते खेलं भवनकलहंसा न जहति ।
अतस्तेषां शिक्षां सुभगमणि-मञ्जीर-रणित-
च्छला-दाचक्षाणं चरणकमलं चारुचरिते ॥९१॥

பதந்யாஸ-க்ரீடாபரிசய-மிவராப்து-மனஸ:
ஸ்கலந்தஸ்தே கேலம் பவநகலஹம்ஸா ந ஜஹதி ।
அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபகமணி-மஞ்ஜீர-ரணித-
ச்சலாதாசக்ஷாணம் சரணகமலம் சாருசரிதே ||

**நாடி உனதற்புத நடை கற்கு நலம் விரும்பிப்**
**பீடார் பரசிவன் கோயில் அமர்ந்திடும் பேடையனம்**
**ஓடிக் குதித்துன் அழகார் நடையை உடன்பயிலும்:**
**ஈடில் பதம் நூபுரத்தொலி யாற்பயிற் றேற்றமென்னே.**

பொருள்: நீ காலடி வைக்கும் அழகைப்பயில விரும்பி, சிவபிரான் அரண்மனையில் உள்ள அன்னங்கள் தத்தித் தத்தி நடந்து உன் நடையைத் தொடர்ந்து பயில்கின்றன; அச் சமயம் சதங்கை ஒலியால் உன் கால்கள் அவற்றுக்குப்பாடம் போதிக்கும் சிறப்பை என் சொல்வேன்!

**நிவேதனம் :** ஏதாவது சிறந்த நைவேத்யம்

# தேவியின் அகண்ட உருவம்

गतास्ते मञ्चत्वं द्रुहिण-हरि-रुद्रेश्वर-भृतः
शिवः स्वच्छ-च्छाया-घटित कपट-प्रच्छदपटः ।
त्वदीयानां भासां प्रतिफलन रागारुणतया
शरीरी शृङ्गारो रस इव दृशां दोग्धि कुतुकम् ॥९२॥

கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிண-ஹரி ருத்ரேச்வர-ப்ருத:
சிவ: ஸ்வச்ச-ச்சாயா-கடித-கபட- ப்ரச்சதபட: ।
த்வதீயா நாம் பாஸாம் ப்ரதிபலன-ராகாருணதயா
சரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசாம் தோக்தி குதுகம் ॥

**மஞ்சத் தெழிற்கால்கள் மூவர் மகேசனு மன்னினராய்த்**
**தஞ்சம் புகுவர்: சதாசிவன் தன் படிகத் தொளியாம்**
**விஞ்சிடு வெண்ணிற ஆடையொடுன் திரு மேனிச் செம்மை**
**மிஞ்சிடு பிம்பத் துவகை உருவாய் விளங்குவனே.**

பொருள் : பிரமன், நாரணன், உருத்திரன், மஹேசுவரன் என்னும் நால்வரும் சேவகர்களாய் நீ அமரும் கட்டில் கால்களாக நின்று உன்னைவணங்குகின்றனர்; உன்கணவனை ஸதாசிவன் தூய வெள்ளையாடையைப் போர்த்திக்கொண்டு உன் சிவந்த காந்தி பிரதிபலிப்பதால் சிருங்கார ரசமே உருவெடுத்தவர் போல் விளங்குகிறுர். சதாசிவனின் வெண்ணிற காந்தியில் தேவி திருமேனிச் செம்மை பிரதிபலித்து ஒரே சிவப்பு வர்ணமாக ஆகிவிட்டது.

**நிவேதனம்:** சித்ரான்னங்கள்

93

# காமேச்வரனின் கருணசக்தி

अराला केशेषु प्रकृतिसरला मन्दहसिते
शिरीषाभा चित्ते दृषदुपलशोभा कुचतटे ।
भृशं तन्वी मध्ये पृथु-रुरसिजारोह-विषये
जगत्त्रातुं शंभो-र्जयति करुणा काचिदरुणा ॥९३॥

அராலா கேசேஷு ப்ரக்ருதிஸரலா மந்தஹஸிதே
சிரீஷாபா சித்தே த்ருஷதுபலசோபா குசதடே ।
ப்ருசம் தந்வீ மத்யே ப்ருது-ருரஸிஜாரோஹ விஷயே
ஜகத் த்ராதும் சம்போர்-ஜயதி கருணா காசிதருணா ॥

**ஆதி பகவன் அருண நிறங்கொள் அருங்கருணை,**
**ஓதிச் சுருளும் முறுவ வழகும் உளங்குழைவும்**
**சோதி நகிற்கல் இடையின் மெலிவு அல்குல் தூலமுடன்**
**மேதினி காத்திட அன்னை வடிவில் மிளிர்கின்றதே.**

பொருள்: சிவப்பு வர்ணமுள்ள—பரமசிவனின் கருணா சக்தியே நீ. அந்த சக்தியே—சுருட்டை மயிரும், முறுவலழகும், (வாகைப் பூப்போல்) குழைந்த மனமும், மணிக் கல்லின் காந்தியுள்ள ஸ்தனப்ரதேசமும், இளைத்த இடையும், பருமனான நிதம்பமும் தாங்கிய உருவத்துடன் உலகத்தை ரட்சிக்கிறது.

**நிவேதனம்:** தேன்

# தேவியின் ஸ்நானம்

कलङ्कः कस्तूरी-रजनिकर-बिम्बं जलमयं
कलाभिः कर्पूरै-र्मरकतकरण्डं निबिडितम् ।
अतस्त्वद्भोगेन प्रतिदिनमिदं रिक्तकुहरं
विधि-र्भूयो भूयो निबिडयति नूनं तव कृते ॥९४॥

கலங்க: கஸ்தூரீ ரஜநிகர-பிம்பம் ஜலமயம்
கலாபி: கர்பூரைர்-மரகதகரண்டம் நிபிடிதம் |
அதஸ்-த்வத்போகேன ப்ரதிதின-மிதம் ரிக்தகுஹரம்
விதிர் பூயோ பூயோ நிபிடயதி நூநம் தவ க்ருதே ||

**வெண்திங்கள் மண்டிலம் மேலாம் மரகதப் பாண்டம்; அதில்**
**கண்ட மதியுரு நீர்மயம்; நாப்பண் களங்கமது**
**கொண்ட கத்தூரி; கற்பூர சகலம் கொளுங்கிரணம்;**
**பெண்! மங்கலநீர் குறைய விதியிதைப் பேணுவனே.**

*பொருள்: சத்தியே! சந்திரமண்டலம் மரகதமணியால் செய்யப்பட்டபாத்திரம்; அப்பாத்திரத்தில் சந்திரனே நிர்மல மான நீர்; சந்திரன் நடுவில் காணப்படும் களங்கமே கஸ்தூரி; சந்திர கிரணங்களே பச்சைக் கற்பூரப்பொடி. தேவி கிருட்டினப் பக்கப் பிரதமை முதல் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக நீரெடுத்து நீராடுகிருள். பூரணமதி ஒவ்வொரு கலையாகக் குறைவதும் இதனுல்தான். அமாவாசையில் மரகதப் பாண்டத்தில் நீரில்லை. வளர்பிறையில் பதினைந்து நாளும் பிரமன் மரகதப் பாண்டத்தில் நீரை நிரப்பி வைக் கிருன்.*

**நிவேதனம்:** வெண்பொங்கலும், பழமும்

# தேவியை வழிபடும் தகுதி

पुराराते-रन्तःपुरमसि तत-स्त्वच्चरणयोः
सपर्या-मर्यादा तरलकरणाना-मसुलभा ।
तथा ह्येते नीताः शतमखमुखाः सिद्धिमतुलां
तव द्वारोपान्त-स्थितिभि-रणिमाद्याभि-रमराः ॥९५॥

புராராதே-ரந்த:புரமஸி ததஸ்-த்வச் சரணயோ:
ஸபர்யா-மர்யாதா தரலகரணானும் அஸுலபா ।
ததா ஹ்யேதே நீதா: சதமகமுகா: ஸித்திமதுலாம்
தவ த்வாரோபாந்த-ஸ்திதிபி-ரணிமாத்யாபி-ரமரா:

**தேவி! நீ நம்பன் 'பெருந்தேவி இல்லம்' திகழரசி
யாவர் அருகில் திருவடிப்பூசை இயற்றவல்லார்?
தேவர் உன்வாயிலில் ஆவலொடெய்த் தெட்டுச் சித்தியரால்
மேவும் இணையிலாச் சித்தி பலபெற்று மீளுவரே.**

பொருள் : தேவி! நீ பரமசிவனின் அந்தப்புரத்தில் வசிக்கும் பட்டத்தரிசி. ஆகவே, புலன்களை வெல்லாதவர் யாரும் உன் திருவடி அருகில் வந்து பூசித்தல் இயலாது. இந்திராதி தேவர்களும் அந்த பாக்யம் கிடைக்காமல் உன் துவார பாலகிகளான அணிமாதிசித்திகளை மட்டுமே அடைந்து திரும்பி விட்டனர்.

**நிவேதனம் :** எள்ளோரையும், சர்க்கரையும்

# தேவியின் பதிவிரதத் தன்மை

कलत्रं वैधात्रं कति कति भजन्ते न कवयः
श्रियो देव्याः को वा न भवति पतिः कैरपि धनैः ।
महादेवं हित्वा तव सति सतीना-मचरमे
कुचाभ्या-मासङ्गः कुरवक-तरो-रप्यसुलभः ॥९६॥

கலத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய:
ச்ரியோ தேவ்யா: கோ வா ந பவதி பதி: கைரபி தனை: |
மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீனு-மசரமே
குசாப்யா மாஸங்க: குரவக-தரோ-ரப்யஸுலப: ||

**தாராள் பிரமன் மனைவியைப் பல்லோர் தழுவிடுவர்**
**சீராள் திருமகள் பெற்றியு மஃதே; திகழ்சதி நீ**
**சாருங்குரவும் தழுவாய் முதல்வர்த் தழுவிடுவாய்;**
**ஈரேழ் புவனத்தின் அச்ச மகற்று மிளம்பிடியே**

பொருள்: பதினுன்குலக மக்களின் அச்சத்தை அகற்று வதையே குறிக்கோளாகக் கொண்டவளே! பிரமன் பத்தினியை எந்த எந்தக் கவிகள் தாம் அடையாமல் இருக்கிறார்கள். அது போன்று ஏதேனும் ஒரு செல்வத்தைப் பெறுவதன் மூலம் எவன்தான் இலக்குமிக்குக் கணவனாக ஆவதில்லை? உன்னைத் தழுவும் பேறு பரமசிவனைத் தவிர்த்து, குராமரத்துக்குக்கூட(மருதாணி மரம்)க் கிடைப்பதில்லையே நீ அல்லவோ சிறந்த பதிவிரதை!

**நிவேதனம்:** பால் பாயசமும், தேனும்

# தேவியின் சொரூபம்

गिरामाहु-र्देवीं द्रुहिणगृहिणी-मागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरी-मद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगम-निस्सीम महिमा
महामाया विश्वं भ्रमयति परब्रह्ममहिषि ॥९७॥

கிராம் ஆஹுர்-தேவீம் த்ருஹிண-க்ருஹிணீம்
ஆகமவிதோ
ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரி தநாயம்
துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம-மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பர-ப்ரஹ்ம-மஹிஷி ||

**வேதமுணர்ந்தோர் நினைப்பா ரதியாய் விளம்பிடுவர்**
**நாத முதல்வி! நினை இந்திரையாய் நவின்றிடுவர்;**
**ஏதமில் சங்கரி என்பர்; நீ மூலத் திலங்குபரை**
**காதற்புவன மயக்கிடு சித்தாம் களிமயிலே.**

பொருள்: வேத ரகசியம் உணர்ந்தவர், நீயே பிரம்ம பத்னி சரஸ்வதி என்றும் நீயே திருமால் பத்தினியாம் இலக்குமி என்றும், நீயே சிவபத்தினியாம் பார்வதி என்றும் கூறுகின்றனர்; நீ வாக்கு மனம் கடந்த நான்காவது தத்துவம். 'மகா மாயை' என்ற உருவத்துடன் கூடினவளாய்ப் பிரபஞ்சத்தைப் பிரமிக்கச் செய்கிறாய்.

**நிவேதனம்:** தேன், க்ஷீரான்னம்

# தேவியின் கருணைச் சிறப்பு

**कदा काले मातः कथय कलितालक्तकरसं**
**पिबेयं विद्यार्थी तव चरण-निर्णेजन-जलम् ।**
**प्रकृत्या मूकानामपि च कविता-कारणतया**
**कदा धत्ते वाणीमुखकमल-ताम्बूल-रसताम् ॥९८॥**

கதா காலே மாத: கதய கலிதாலக்தகரஸம்
பிபேயம் வித்யார்த்தீ தவ சரண நிர்ணேஜந-ஜலம் ।
ப்ரக்ருத்யா மூகானமபி ச கவிதா-காரணதயா
கதா தத்தே வாணீ-முககமல-தாம்பூல ரஸதாம் ॥

**வித்தை விரும்பு மடியேன் அலத்தகமேவடி நீர்**
**உத்தமி! என்று பருகுவன்? சொல்! இயல்பூமையர்க்கும்**
**பத்திச் சுவைச் சொற்கவிதை அளித்திடும் பாரதியின்**
**வத்திரத் தம்பலச் சாறே என அது மாண்புறுமே?**

பொருள்: கல்வியறிவை எதிர் நோக்கும் நான், மருதாணியால் அலங்கரிக்கப்பட்ட உன் திருவடிகளை அலம்பின தீர்த்தத்தை எப்போது பருகுவேன்? சொல்! அந்தத் தீர்த்தம், ஊமைகட்கும் கவிதை இயற்றும் சக்தியை அளிக்க வல்லதாதலால், சரஸ்வதி வாயால் மெல்லப்பட்ட தாம்பூலச் சாற்றின் தன்மையை எப்போது அடையப் போகிறது?

**நிவேதனம்: தேன்**

# தேவி உபாசனையின் பலன்

सरस्वत्या लक्ष्म्या विधि-हरि-सपत्नो विहरते
रतेः पातिव्रत्यं शिथिलयति रम्येण वपुषा ।
चिरं जीवन्नेव क्षपित-पशुपाश-व्यतिकरः
परानन्दाभिख्यं रसयति रसं त्वद्भजनवान् ॥९९॥

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதி-ஹரி-ஸபத்நோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா ।
சிரம் ஜீவந்நேவ க்ஷபித-பசுபாச-வ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத் பஜநவான் ॥

**சொல்விற்பனங்கொண்டு நின்னன்பர் வேதாவைத் [துன்புறுத்திச்**
**செல்வ வளங்கொழித் துத்திருநாரணன் சீர்சிதைத்தே**
**தொல்லைப் பசுபாசம் நீங்கிப் பல்லூழி துலங்கினராய்**
**வல்லி! 'பரானந்தம்' என்னுஞ் சுவையினை மாந்துவரே.**

பொருள் : ஞானக் கொடியே! உன்னைப் பூசிப்பவன் திருமால் பிரமன் இவர்கட்குப் பகைவனாகி, அவர்கள் பத்னிகளாகிய திருமகள் சரஸ்வதி இவர்களோடு விளையாடுவான்; (செல்வமும் ஞானமும் பெறுவான்) தன் அழகிய மேனியால் ரதிதேவியின் கற்புத் தன்மையை அழிப்பான் (மன்மதனைவிட அழகு பெறுவான்) ஜீவன் அவித்தை என்பவற்றுக்கு இடையே உள்ள பிணைப்பை அறுத்து வெகுகாலம் சீவித்துக்கொண்டே ஜீவன் முக்தி சுகத்தை (பரானந்தம்) அனுபவிப்பான்.

**நிவேதனம் :** வெண்பொங்கல், உளுந்தவடை, தேன்,

## 100

# துதி மகிமை

प्रदीप-ज्वालाभि-र्दिवसकर-नीराजनविधिः
सुधासूते-श्चन्द्रोपल-जललवै-रर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधि-सौहित्यकरणं
त्वदीयाभि-र्वाग्भि-स्तव जननि वाचां स्तुतिरियम् ॥

ப்ரதீப—ஜ்வாலபிர்—திவஸகர—நீராஜநவிதி:
ஸுதாஸூதேஸ்—சந்த்ரோபல—ஜலலவை—ரர்க்யரசனா
ஸ்வகீயை-ரம்போபி: ஸலிலநிதி-ஸௌஹித்யகரணம்
த்வதீயாபிர்-வாக்பிஸ்-தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம் ॥

**ஆதவற் கன்னேன் கதிராவளித்திடும் ஆலத்தியாம்,**
**சீத மதிக்கவன் காந்தச் சிலைநீர் செலுத்துவதாம்;**
**மோதுங் கடல் நீரை மொண்டுசெய்பூஜை முறைமையதாம்;**
**நீதருஞ் சொற்கொண்டு பாடி அருள்பெறு நீர்மையிதே.**

பொருள்: தீவட்டியின் ஜ்வாலையைக் கொண்டே சூரியனுக்கு ஹாரதி செய்வது போலவும், சந்திரகாந்தக் கல்லிலிருந்து பெருகும் நீரைக் கொண்டே சந்திரனுக்கு அர்க்யம் தருவது போலவும், ஸமுத்திர ஜலத்தைக் கொண்டே ஸமுத்திரத்தைத் திருப்தி செய்வது போலவும் உன் வாக்குகளைக் கொண்டேயல்லவா உன்னுடைய இந்தத் துதி அமைந்தது!

**நிவேதனம்:** நாவல்பழமும், த்ரிமதுரமும்

**ஸௌந்தர்யலஹரீ முற்றும்**

ஒரு நாளில் ஆயிரத்தெட்டு முறை படனம் செய்வதால் ஏற்படும் பலன்கள்


| பாடல் எண் | | பக்க எண் |
|---|---|---|
| 1. | எல்லா நன்மைகளையும் பெற | 10 |
| 2. | ஜடப்பொருளால் தடைநீங்க | 11 |
| 3. | வேதப்பொருள் விளங்க | 12 |
| 4. | வியாதிகள் நீங்க | 13 |
| 5. | அனைவரையும் வசீகரிக்க | 14 |
| 6 | தம்பதிகளுக்குள் அன்பு ஏற்பட | 15 |
| 7. | பகைவரை வெற்றி கொள்ள | 16 |
| 8. | ஸம்ஸார பந்தம் நீங்க | 17 |
| 9. | பஞ்ச பூதங்கள் சுவாதீனமாக | 18 |
| 10. | சரீர சுத்தி உண்டாக | 19 |
| 11. | மலடு நீங்க | 20 |
| 12. | கவிதை உண்டாக | 21 |
| 13. | ஸ்த்ரீ வச்யம் ஆக | 22 |
| 14. | துர்ப்பிட்சம் நீங்க | 23 |
| 15. | கவிதை புனையும் வன்மை ஏற்பட | 24 |
| 16. | சபையோரை மகிழ்விக்க | 25 |
| 17. | சகல கலைகளிலும் ஆற்றல் பெற | 26 |
| 18. | ஸ்த்ரீ வச்யம் | 27 |
| 19. | ஸ்த்ரீ மோஹனம் | 28 |
| 20. | விஷபயம் நீங்க | 29 |
| 21. | மக்களிடம் மரியாதை பெற | 30 |
| 22. | இகலோக சுகம் பெற | 31 |
| 23. | நோய், கடன் தொல்லை நீங்க | 32 |
| 24. | பேய், பூதம் முதலியவை நீங்க | 33 |
| 25. | உயர் பதவி கிடைக்க | 34 |
| 26. | பகைமை நீங்க | 35 |
| 27. | ஆத்ம ஞான முண்டாக | 36 |
| 28. | அபமிருத்யு பயம் நீங்க | 37 |
| 29. | முரட்டுத்தனம் நீங்க | 38 |
| 30. | அஷ்டசித்தி பெற | 39 |
| 31. | ராஜ வச்யம் | 40 |
| 32. | தங்கம் செய்யும்வழி அறிய | 41 |
| 33. | செல்வம் செழிக்க | 42 |

| | | |
|---|---|---|
| 34. | சந்தேகம் நீங்க | 43 |
| 35. | மார்பு நோய் நீங்க | 44 |
| 36. | பயங்கர ரோகங்கள் நீங்க | 45 |
| 37. | பிசாசுபீடை நீங்க | 46 |
| 38. | குழந்தைகள் நோய் நீங்க | 47 |
| 39. | துஸ்ஸ்வப்ன தோஷம் நீங்க | 48 |
| 40. | வருங்காலம் உணர | 49 |
| 41. | வயிற்றுவலி நீங்க | 50 |
| 42. | மஹோதரம் நீங்க | 51 |
| 43. | வெற்றி, புகழ், பெறவும் வியாதி நீங்கவும் | 52 |
| 44. | மக்களின் மனத்தைக் கவர | 53 |
| 45. | வருங்காலத்தை உணர | 54 |
| 46. | புத்திர லாபம் உண்டாக | 55 |
| 47. | தெய்வ ப்ரீதி பெற | 56 |
| 48. | கிரஹதோஷம் நீங்க | 57 |
| 49. | நிதி லாபம் பெற | 58 |
| 50. | அம்மை நோய் நீங்க | 59 |
| 51. | புகழ்பெற | 60 |
| 52. | கண்நோய், காதுநோய் நீங்க | 61 |
| 53. | சகுனம் பார்க்க | 62 |
| 54. | துஷ்ட ரோகங்கள் நீங்க | 63 |
| 55. | சத்துரு மரிக்க | 64 |
| 56. | சிறைவாசம் நீங்க | 65 |
| 57. | சுபிட்சம் ஏற்பட | 66 |
| 58. | புகழ் பெறவும், நோய் நீங்கவும் | 67 |
| 59. | மனைவியின் ப்ரீதியைப் பெற | 68 |
| 60. | கல்வி அறிவு பெற | 69 |
| 61. | விரும்பியதைப் பெற | 70 |
| 62. | சுகமான தூக்கம் பெற | 71 |
| 63. | அதிகாரம் பெற | 72 |
| 64. | ஸ்த்ரீகளின் நோய் நீங்க | 73 |
| 65. | அனைத்திலும் வெற்றி பெற | 74 |
| 66. | ஸர்வரோக நிவாரணம் | 75 |
| 67. | ராஜப்ரீதி உண்டாக (1) | 76 |

| | |
|---|---|
| 68. ராஜப்ரீதி உண்டாக (2) | 77 |
| 69. எடுத்த செயல் நன்கு நிறைவேற (1) | 78 |
| 70. எடுத்த செயல் நன்கு நிறைவேற (2) | 79 |
| 71. தேவதைகளை வசப்படுத்த | 80 |
| 72. யாத்திரையில் பயம் நீங்க | 81 |
| 73. பால் பெருக | 82 |
| 74. புகழ் உண்டாக | 83 |
| 75. கவிதா சக்தி உண்டாக | 84 |
| 76. ஸர்வ வல்லமை பெற | 85 |
| 77. வெற்றி பெற | 86 |
| 78. ராஜப்ரீதி ஏற்பட | 87 |
| 79. இந்திர ஜால சக்தி பெற | 88 |
| 80. மஹேந்திர ஜாலத்தின் வன்மை ஏற்பட | 89 |
| 81. அக்னி ஸ்தம்பன சக்தி பெற | 90 |
| 82. நீரில் நடக்கும் சக்தி பெற | 91 |
| 83. சேனையை அடக்க | 92 |
| 84. பரகாயப் பிரவேச சக்தி பெற | 93 |
| 85. பூத, ப்ரேத, பிசாசங்களை அகற்ற | 94 |
| 86. பிசாசுகளை ஓட்ட | 95 |
| 87. பாம்பு பயம் நீங்க | 96 |
| 88. மிருகங்களை ஆகர்ஷிக்க | 97 |
| 89. நோய்கள் நீங்க | 98 |
| 90. பில்லி, சூனியம், ஏவல் நீங்க | 99 |
| 91. ஸ்தாவர சொத்துக்கள் பெற | 100 |
| 92. ராஜாங்கத் தலைமை பெற | 101 |
| 93. விரும்பியது பெற | 102 |
| 94. பிறரால் போற்றப்பட | 103 |
| 95. ரணங்கள், புண்கள் ஆற | 104 |
| 96. நல்ல அறிவு பெற | 105 |
| 97. வாக்குவன்மையும் உடல்உறுதியும் பெற | 106 |
| 98. மலடு நீங்க | 107 |
| 99. ஆரோக்யமும் சகல வசதிகளும் பெற | 108 |
| 100. சகல கார்ய ஸித்தி பெற | 109 |